# அருள்

சென்றுகாண்டற்கரிய
கோயில் சிங்கவேள் குன்றமே



ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹன் (மூலவர்)
மேல் அஹோபிலம்






தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பிரமாதீச சித்திரை (13-4-73) [கருணை 7

## மகாதேவ மாலை

கருணை நிறைந்து அகம்புறமும் துளும்பி
வழிந்து உயிர்க் கெல்லாம் களைகண் ஆகித்
தெருள் நிறைந்த இன்பநிலை வளர்க்கின்ற
கண்ணுடையோய்! சிதையா ஞானப்
பொருள் நிறைந்த மறையமுதம் பொழிகின்ற
மலர்வாயோய்! பொய்யனேன்றன்
மருள் நிறைந்த மனக் கருங்கற் பாறையும் உட்
கசிந்துருக்கும் வடிவத் தோயே

— திருவருட் பிரகாச வள்ளலார்

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
| --- | --- | --- |
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை - 600 087

# நெசவாளர்களுக்கு நேசக் கரம் நீட்டும் பாங்க் ஆப் மதுரையின் சாதனை

தனியார் துறை வங்கியான பாங்க் ஆப் மதுரை எளியவர்கள் முன்னேற்றத்திற்கு ஏராளமான திட்டங்கள் போட்டு மிக நல்ல முறையில் செயலாற்றி வருகிறது. அதிகமான அளவில் எளியவர்கள் இந்த வங்கியின் உதவி கொண்டு முன்னேற்றமடைந்துள்ளனர். இப்போது வங்கி நெசவாளர்கள் முன்னுக்கு வர ஒரு நல்ல திட்டம் ஏற்படுத்தி செயல்படுத்துகிறது. இன்னும் பல நல்ல திட்டங்களைச் செயல்படுத்த திட்டமிட்டு வருகிறது.

## நெசவாளர்கள் துயர் துடைக்க முன்வருகிறது பாங்க் ஆப் மதுரை

மதுரை நடனகோபால நாயகி வீவிங் செண்டர் நெசவாளர்களுக்கு தறி வாங்குவதற்கு பாங்க் ஆப் மதுரை லிமிடெட் மதுரை மெயின் கிளை கடன் உதவி வழங்கும் விழா 26-3-73ல் சௌராஷ்டிரா உயர் நிலைப் பள்ளியில் மதுரை மாவட்ட ஆட்சித்தலைவர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

இந்த விழாவில் கலந்து கொண்டு பாங்கின் சேர்மன் திரு. கிருஷ்ணன் அவர்கள் உரையாற்றும்போது சமுதாய முன்னேற்றம் காண்பதற்கு பாங்குகள் உதவி செய்ய வேண்டும் என்பதே இன்றைய அரசின் கொள்கை என்றும் அப்படி உண்மையிலே முன்னேற்றமடைய ஏழை மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தால்தான் சமுதாய முன்னேற்றம் காண முடியும் என்று கூறி அதற்காக பாங்க் ஆப் மதுரை செயல்படுத்தும் திட்டங்கள் பலவற்றை விவரித்துக் கூறினார்கள். கடன் உதவி பெறும் நெசவாளர்கள் நாணயம், உழைப்பு, திறமை முதலியவைகளைக் கடைப்பிடித்து மேலும், மேலும் முன்னேறி இன்று ஒரு தறிக்கு கடன் உதவி பெறும் நெசவாளி இரண்டு, நான்கு என்று பல தறிகள் வாங்கி ஒரு கைத்தொழில் தொழில்சாலையே நடத்த வேண்டும் என்று வாழ்த்துக் கூறினார்கள்.

1200 பேர்களுக்கு ரூபா $7\frac{1}{2}$ லட்சம் கடன் வழங்கும் திட்டத்தில் ஓர் அங்கமாக 100 பேர்களுக்கு ரூபாய் நாற்பதினாயிரம் கடன் வழங்கினார் வங்கியின் சேர்மன் திரு. கிருஷ்ணன் அவர்கள்.

மாவட்ட ஆட்சித் தலைவர் திரு சீதாராமதாஸ் அவர்கள் பேசுகையில் நெசவாளர்கள் தன்னை அணுகியதாகவும் தான் பாங்க் சேர்மன் திரு. கிருஷ்ணன் அவர்களைக் கேட்டதற்கு அவர் உடனே ஒப்புதல் அளித்து இந்தத் திட்டத்தை நிறைவேற்றித் தந்ததையும் ஏழை மக்களின் வாழ்வை உயர்த்துவதே தன்னுடைய லட்சியமாகக் கொண்டுள்ள திரு. கிருஷ்ணன் அவர்களின் சேவையைப் பாராட்டிப் பேசினார்.

நாட்டுப்பண்ணுடன் விழா இனிது முடிவுற்றது.

● திருநீறு பூசுவதற்காக இறைவன் நம் நெற்றியை விசாலமாகவும் நீளமாகவும் படைத்தான். திருநீற்றைக் கையில் எடுத்து, அண்ணாந்து சிவ மந்திரத்தைக் கூறிப் பூசிக் கொள்ள வேண்டும். கீழே சிந்தவிடக்கூடாது. செவிகள் மீதும், தோள்கள் மீதும் சிந்தப் பூசிக் கொள்ள வேண்டும்.

● ஆண்டவனது உருவத்திருமேனிகளான மகேசன், ருத்ரன், மால், அயன் என்ற நான்கினுள்ளும் முதலாவதும், தலைசிறந்ததுமான உருவத்தினைக் கொண்டவரே மகேசன். இவர் பரமேஸ்வரன் என்றும் அழைக்கப்படுவார்.

● வாரம் ஒரு முறை எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும் எண்ணெய் ஸ்நானம் வெந்நீரில் செய்வது நலம். எண்ணெய் நன்ருகப் போகும்படி சீயக்காய் தேய்த்துக் குளிக்க வேண்டும். குளித்தபிறகு தலையில் எண்ணெய் தேய்க்கலாகாது.

● ஆன்மகுணமாகியஅகங்காரம் சங்கற்பம், குரோதம், மோஹம் என்பவற்றையே அமுதாகச் சமர்ப்பித்தல் என்னும் பாவனையே நைவேத்தியமாகும்.

● தேன் இயற்கைப் பொருள். கிளர்ச்சி யூட்டாதது. இரத்தத்தில் உடனே கலக்கும். நரம்பு மண்டலமோ, மற்ற உறுப்புக்களோ பாதிக்கப்படுவது இல்லை. சக்தி தரும் பொருள் தேன். 1 பவுண்ட் தேன் 1500 கலோரிகள் சக்தியைத் தரும். இயற்கையில் பேரிச்சம் பழத்தைத் தவிர வேறு எதற்கும் இந்தச் சக்தி இல்லை.

● இங்கிலாந்து அரசர் இரண்டாம் ஹென்றி அமைதியற்ற மனநிலை உடையவராதலால் எப்போதுமே தனது சாப்பாட்டை நின்று கொண்டே தான் சாப்பிடுவாராம்.

● சோம்பேறி இரண்டுமுட்களும் இல்லாத கடிகாரம். அது நின்ருலும் ஓடினாலும் ஒரு பயனுமில்லை.

● ஏழைகளே இறைவனின் இனிய பக்தர்கள் என்பது உண்மையாயிருக்கலாம். ஆனால் எந்தப் பணக்காரனும் தன் பணத்தை இழந்து, சுகத்தைத் துறந்து, இறைவனுடைய பக்தனாக வேட்கையுற்றுத் தன்னை ஏழையாக்கிக் கொள்வது இல்லை.

● நாம் சுறுசுறுப்பாக இருப்பது மட்டும் போதாது. எறும்புகள் கூடச் சுறுசுறுப்பாகத்தான் இருக்கின்றன. ஆனால் எதில் சுறுசுறுப்பாக இருக்கிறோம் என்பது தான் முக்கியம்.

● ஆண்கள் இடது பக்கமும், பெண்கள் வலது பக்கமும் படுத்துத் தூங்க வேண்டும். இப்படிச் செய்வதால் சாப்பிட்ட உணவு விரைவில் எளிதாக ஜீரணமாகும்.

● காஞ்சி ஸ்ரீ ஜகத்குரு அவர்கள் ராமேஸ்வரம் விஜயம் செய்து

துந்துபிவருடம் (1922) புரட்டாசி மாதம் பூர்ணமி அன்று ராமசேது வில் கங்கையில் கலப்பதற்கென மணல் எடுத்துக் கொண்டார்கள். அந்த மணலும் பல வருடம் ஆடி மாதம் பத்தாம் தேதி புதன் கிழமை (25-7-1934) அலகாபாத் என்னும் பிரயாகை திருவேணி சங்கமத்தில் சேர்க்கும் வரையில் ஸ்வாமிகளின் பூஜையிலேயே இருந்து வந்தது.

● இரவில் சாப்பிட்டதும், சற்று உலவி விட்டுத் தூங்கப் போக வேண்டும். இரவில் படிப்பதோ, எழுதுவதோ-உணவருந்திய பிறகு கூடவே கூடாது.

● தோல்விகளும், வெற்றிகளும் வாழ்க்கையில் இயற்கையானது தான். அவைகள் வாழ்வின் இலக் கணமாகும். அவைகள் இல்லை என்ருல் வாழ்க்கையில் பொருளே இருக்காது.

● உடல் பொருள் ஆவியால் காத்து வளர்க்கப்படுவது இலட்சி யம். நிமிடத்திற்கு நிமிடம் தோன்றி மறைவது ஆசை இவற் றில் மனிதனுக்கு இன்றியமை யாதது இலட்சியம் தான்.

● உணர்ச்சி ஒரு மனிதனை உயர்த் தும், ஒரு நாட்டை உயர்த்தும்- ஏன்? உலகத்தையே உயர்த்தும். ஆனுல் அதே உணர்ச்சி மிகுந்து விட்டால் இவை எல்லாவற்றை யுமே அழித்து விடும்.

● சாத்திரங்களில் சிறந்தது திருமூலரின் திருமந்திரம். இது மொத்தம் எண்ணுயிரம். தோத் திரங்களில் சிறந்தது திருவாசகம். இவற்றில் நாம் முடிந்ததை படிக்கலாம்.

● மக்களெல்லாம் சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தில் அங்கத் தினர்களாக வேண்டும். சாதி சமய பேதங்களை யெல்லாம் விடுத்து வடலூர் சத்திய ஞான சபையில் நித்தமும் கூட்டு வழி பாடு நிகழ்த்த வேண்டும் என்று வள்ளலார் விரும்பினுர்.

● உருளைக்கிழங்கை முதல் முத லாக 1570-ஆம் ஆண்டில் ஸ்பா னியர்கள் தென் அமெரிக்காவில் இருந்து கொண்டு வந்தார்கள். பின்னர் அது ஐரோப்பா முழுவ திலும் பரவியது.

● கண்ட கண்ட நேரங்களிலெல் லாம் ஆகாரத்தை உள்ளே செலுத்துவது நமக்கு நாமே இயற்றும் பாவமாகும். நம் வயிற் றிலிருக்கும் தீ ஒரளவுக்குத் தான் ஆகாரத்தை சீரணிக்கக் கூடும். அளவுக்கு அதிகமாக உண்டால் தீ அணைக்கப்பட்டு வயிற்றுவலி, புளி ஏப்பம், அஜீரணம், பேதி முதலிய வியாதிகள் உண்டாகும்.

● ஒருநாளைக்கு ஒரு முறை சாப் பிடுபவன் முனிவன். இரண்டு வேளை உண்பவன் செல்வன். மூன்று வேளை உண்பவன் தீராத நோயாளி என்று வேதம் கூறு கிறது.

● இளையவரோ, முதியவரோ, எளியவனோ, நோயாளியோ, யாராயிருந்தாலும் சோம்பலை

உதறி எறிந்து தினமும் யோகாச னங்களைச் செய்து பழகினால் நல்ல பலன் கிடைக்கும் என்று ஹட யோகம் கூறுகிறது.

● திருவெண்காடு என்ற ஊரில் தான் சிவனுக்கும், அம்பிகைக்கும் எதிர், எதிராகச் சந்நிதிகள் அமைந்திருக்கின்றன. வேறு எங்கும் அப்படிக் கிடையாது. ஈசுவரன் அகோர வீரபத்திரராக வும், அம்பிகை காளியாகவும் தரிசனம் தருகிறார்கள்.

● சரஸ்வதி தேவிக்கு கூத்தனூ ரில் தனிக் கோவில் இருக்கிறது. தமிழ் நாட்டில் சரஸ்வதிதேவிக்கு தனிச் சந்நிதி வேறு எங்குமில்லை. இவள் கவி ஒட்டக் கூத்தர் பூஜை செய்த அம்மன்.

● குங்குமப் பூச் செடி பயிரிட அதிகமான முயற்சி செய்ய வேண் டும். ஒரு கிலோ குங்குமப்பூ பொடி தயாரிக்க சுமார் எழுபத்தி ஐயாயிரம் பூக்கள் வேண்டும் அதனால் தான் குங்குமப் பூ விலை மிக அதிகம்.

● ஆயிரம் துப்பாக்கிச் சனியன் களைக் காட்டிலும் மூன்று பத்தி ரிகைகளைக் கண்டு நான் மிகவும் பயப்படுகிறேன் என்றுரிடத்தில் சொன்னான் உலகையே ஆட்டிப் படைத்த சர்வாதிகாரி நெப்போ லியன். இதிலிருந்தே பத்திரிகை யின் மதிப்பு நன்கு விளங்கும்.

● ஜப்பானியர்கள் வாழ்க்கை யில் காகிதத்துக்கு முக்கியமான ஓர் இடம் உண்டு. புத்தகங்கள், செய்தித் தாள்கள் உருவாக்க மட்டுமின்றி, அழகுக் கலைக்காக வும், பொழுது போக்குக்காகவும், பயனுள்ள வேறு பொருள்கள் செய்யவும் அவர்கள் வெகு திற மையோடு பயன்படுத்துகிறார் கள்.

● ஜப்பானில் பத்திரிகை படிக் கும் ஆர்வம் மக்களுக்கு மிக அதிகம். அங்கு செய்தித் தாள் களும் பத்திரிகைகளும் அதிக அளவில் விற்பனையாகின்றன. 1969-ல் எடுத்த கணக்குப்படி ஜப்பானில் காலை, மாலை இரு பதிப்புகளும் சேர்ந்து 116 தினசரி செய்திகள், 51 மில்லியன் பிரதி கள் விற்பனையாகின்றன என்று தெரிந்தது.

● ஒரு முறை சமையல் செய்த காய்கறிகளை மறு முறை சுட வைக்கக்கூடாது. அப்படிச் செய்வ தினால் அவற்றில் இருக்கும் உயிர்ச் சத்துக்கள் அழிந்து விடும். அத னால் தேவைக்கு அதிகமான காய் கறிகளைச் சமைக்கக் கூடாது.

● ஒரு எலுமிச்சம் பழச் சாற்று டன் ஒருடம்ளர் தண்ணீரும் சர்க் கரையும் சேர்த்துக் கலக்கிக் குடித் தால் களைப்பு மாறும். தாகம் தணியும். உடலில் ஒருபுத்துணர்ச் சியேற்படும்.

● நூறு வருஷ காலம் வருஷம் தோறும் அசுவமேதயாகம் செய்த பயனும், மாமிச போஜனம் செய் யாத பயனும் ஒன்றே யாகும்

என்று மநுதரும சாஸ்திரம் சொல்லுகிறது. புலால் உண்ணு தவர்கள் அவ்வளவு பாக்யசாலி கள் ஆவார்கள்.

● பசியாலும், பட்டினியாலும், தாகத்தாலும் இறந்தவர்கள் மிகச்சிலரே யாவர். ஆனல் அள வுக்கு அதிகமாக, அடிக்கடி பெருந் தீனி தின்பவர்களும், குடியாலும் இறந்தவர்களே ஏராளமானவர் கள்.

● மனிதரில் மூன்று பிரிவு உண்டு. மனிதரில் விலங்கு. மனிதரில் மனிதர். மனிதரில் தேவர். ஆசை உள்ளம் படைத்தவன் விலங்கு. அன்பு உள்ளம் படைத்தவன் மனிதன். அருள் உள்ளம் படைத் தவன் தேவன்.

● ஆண்டவனின் திருவருளைப் பெறவேண்டுமானல் சாதி, மதம், சமயம், வருணம், நாடு, மொழி, காலம், பழக்க வழக்கங்கள், மூட நம்பிக்கைகள் இவை போன்ற தடைகளை அறவே ஒழித்தல் வேண்டும் என்கிறுர் திருவருட் பிரகாச வள்ளலார்.

● உணவருந்தும் போது பேசக் கூடாது. மௌனமாக, நன்ருக மென்று சுவைத்துச் சாப்பிட வேண்டும். மனக்கவலை அளிக்கக் கூடிய எந்தப் பேச்சும் பேசக் கூடாது. நிதானமாகச் சாப்பிட வேண்டும். தினசரி சாப்பாட்டில் கூடுமான வரை நெய், மோர் கீரை, காய்கறி, பழங்கள் சேர்த் துக் கொள்ள வேண்டும்.

● காலையில் வெறும் வயிற்றில் ஒரு டம்ளர் நல்ல தண்ணீரில் ஒரு டீஸ்பூன் தேன் கலந்து சாப்பிட் டால் இரத்தம் உண்டாகும். தினசரி தவருமல் சாப்பிட்டு வந் தால் உடம்பில் அசுத்த இரத்தம் நீங்கி நல்ல ரத்தம் உண்டாகும்.

● சிந்தனை சந்தேகத்தையும், சந் தேகம் ஆராய்ச்சியையும், ஆராய்ச்சி உண்மையையும், உண்மை நல்ல நம்பிக்கையையும் வளர்க்கின்றன.

● கொள்கை இல்லாத அரசியல், உழைப்பு இல்லாத செல்வம், ஒழுக்கமில்லாதவர் தீதகம், பண்பு இல்லாத கல்வி, மனசாட்சி இல் லாத இன்பம், மனிதத் தன்மை இல்லாத விஞ்ஞானம், தியாகம் இல்லாத வழிபாடு ஆகியவை பாவங்களாகும்.

● இந்தியா உலகின் ஏழாவது பெரிய நாடு. பிரிட்டனைப் போல் 14 பங்கும், ஜப்பானைப் போல் 9 பங்கும், கனடாவில் மூன்றில் ஒரு பாகமும், சோவியத் யூனியனில் ஆறில் ஒரு பாகமும் நிலப்பரப்பு கொண்டது.

● அதிர்ச்சியினுல் ரத்தக் குழாய் கள் சுருங்குகின்றன. அதனுல் மூளைக்குப் போதுமான இரத்தம் போக வழி தடைப்படுகிறது. இத ஞலேயே மூர்ச்சை ஏற்படுகிறது.

● இரண்டு முறை நோபல் பரிசு பெற்ற பெருமை ரேடியத்தைக் கண்டு பிடித்த க்யூரி அம்மையா ருக்கு மட்டுமே உண்டு. அதுமட்டு மின்றி அவரது மகளும், மருமக னும்கூட நோபல்பரிசு பெற்றனர்

## நகரக் கோவில்களின் விவரம்

| | கோயிலின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 1 | இளையாற்றங்குடி | கயிலாசநாதர் | நித்ய கல்யாணி |
| 2 | மாற்றூர் | ஐநூற்றீசர் | பெரியநாயகி |
| 3 | வயிரவன் கோயில் | வளரொளிநாதர் | வடிவுடையம்மை |
| 4 | இரணிக்கோயில் | ஆட்கொண்டநாதர் | சிவபுரந்தேவி |
| 5 | பிள்ளையார்பட்டி | மருதீசர் | வாடாமலர் மங்கை |
| 6 | நேமம் | ஜெயங்கொண்ட சோழீசர் | சவுந்தரநாயகி |
| 7 | இலுப்பைக்குடி | தான்தோன்றியீசர் | சவுந்தரநாயகி |
| 8 | சூரைக்குடி | தேசிகநாதர் | ஆவுடைநாயகி |
| 9 | வேலங்குடி | கண்டீசுவரர் | காமாட்சியம்மை |

## விநாயகர்



தமிழ் மக்கள் அனைவருக்கும் விநாயகரிடம் ஈடுபாடு உண்டு. இவ்வீடுபாடு நகரத்தார்களிடம் சிறப்பாகக் காணப்படுகிறது. 'பிள்ளையார் பட்டி' என்ற கோயிற் பிரிவு (கோத்திரப்பிரிவு) நகரத்தார்க்குள் இருப்பதாலும் பல நூற்றுண்டுகட்குமுன் நகரத்தார்களிடம் 'மரகத விநாயகர்' இருந்ததாக வரலாற்றுச் செய்திகள் கூறுவதாலும் இது தெரிய வருகிறது. மரகதத்தால் விநாயகர் உருவம் செய்திருப்பார்களா? என்று ஐயப்படுவதற்கு விடை கூறுமாப் போல் தாய்லாந்து நாட்டில் 4 அடி உயரமுள்ள மரகத புத்தர் திருவுருவம் இன்னும் காணப்படுகிறது.

நகரத்தார்கள் கட்டியுள்ள விநாயகர் கோவில்களின் எண்ணிக்கை ஓராயிரத்துக்கும் மேற்பட்டது.

# சிதம்பரம் வள்ளல்



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்
சுவாமிகள்

உலகிலே தோன்றியவர்களில் ஞானிகள் பலர். பக்தர்கள் பலர். வீரர்கள் பலர். கற்புடைய பதி விரதைகள் பலர். வள்ளல்கள் மட்டும் சிலர் தான் தோன்றினர் கள். அதுவும் எண்ணிக்கைக்கு உட்பட்டு, முதல் எழு வள்ளல் கள், இடையெழு வள்ளல்கள், கடையெழு வள்ளல்கள் என்று மூவேழு இருபத்தொன்று என்று கணக்கிடப்பட்டுள்ளனர்.

இதனால் ஞானிகளாகப் பிறக்க லாம், பக்தர்களாகப் பிறக்க லாம், பதிவிரதைகளாகப் பிறக்க லாம். ஆனால் வள்ளலாகப் பிறப்பது மிகவும் அரிது என்பது விளங்குகிறது. அள்ளிக் கொடுக் கின்ற வள்ளல் கோடிக்கு ஒருவ ராகும்.

சிதம்பரம், தருமபூஷணம் உயர்திரு. செ. ரெத்தினசாமி செட்டியார் அவர்கள் அகமும் முகமும் மலர்ந்து விருந்தினரை உபசரிக்கும் உத்தம சீலர். சுருக் கமாகச் சொன்னால் இருபதாம் நூற்றாண்டின் சிறுத் தொண்ட நாயனார் என்று இவரைக் கூறி விடலாம்.

வந்தவரைச்செந்தண்மையுடன் உண்பித்துத் தான் பின்னர் உண் ணும் வண்மை உடையவர்.

அடக்கம், பொறுமை, வாய்மை, தூய்மை, நேர்மை, தெய்வ பக்தி, குருபக்தி, அடியார் பக்தி, வள்ளன்மை, உள்ளன்பு, முதலிய நற்குணங்கள் அனைத்துக்

கும் இவர் உறைவிடமாக வாழ்ந் தார்.

ஈரந்தங்கிய நெஞ்சும், வாரநீக் கிய வாழ்வும், வீரந்தங்கிய செய லும் உடையவர். அயர்ச்சி இல் லாத முயற்சியால் உயர்ச்சி பெற்றவர்.

ஈட்டிய பொருளை அறப்பணி களில் அள்ளி வழங்கும் வள்ளன் மையுடையவர். தம் சொந்தச் செலவில் இராமகிருஷ்ணு உயர் நிலைப் பள்ளி அமைத்து அதற்குப் பல லெட்சம் செலவு செய்தார்.

ஆடூர் பெரியபிள்ளை என்று பெருமிதமாகப் பேசப் பெறு கின்ற உயர்திரு. ரத்தினசபாபதி பிள்ளையும், செட்டியாரும், பெரும் பாடுபட்டு நடராஜப் பெருமான் ஆலயத்தைப் பழுது பார்த்து மகாகும்பாபிஷேகம் செய்வித் தார்கள். திரு. செட்டியார் நட ராஜர் ஆலயத்தில் உள்ள பாண் டிய நாயகம் முருகன் கோயிலை இரு முறை புதுப்பித்துக் கும்பாபி ஷேகம் செய்வித்தார்.

வார வழிபாட்டுக் கழகம் அமைத்து, வாரந்தோறும் வழி பாட்டில் கலந்துகொண்டு புலவர் களையும் அடியார்களையும் அன்பு டன் உபசரித்தார். தில்லை திருப் புகழ் சபையை நிறுவி மாதந் தோறும் தக்க அறிஞர்களை அழைத்து விரிவுரை செய்வித்து மக்கள் பவப்பசி மாற அறிவு விருந்து வழங்கச் செய்தார்.

பல குடும்பங்களைப் பேணி உத விக் காத்தளித்தார். யார் வந்து கேட்டாலும் இல்லையென்னுது இன் முகத்துடன் வழங்கினுர்.

எப்போதும் இவருடைய இல் லத்தில் நித்ய கல்யாணம் போல் பலர் உண்டு உவந்து போவார் கள். நடராஜப் பெருமானு டைய நல்விழாக் காலங்களில் இவருடைய திருமாளிகை கொலு மணக்குந் திருமடமாகக் காட்சி தரும்.

இத்தகைய உத்தம நண்பர், ஐப்பசி, திருவாதிரையில் கனக சபாபதியின் குஞ்சித பாதத்தில் சேர்ந்தார்.

'ஆதிரையில் வழி நடந்தார் மீளார்' என்ற வாக்கின்படி திரு வாதிரையில் சிவபதம் சேர்ந்த இவர் மீண்டும் வந்து வினைப் பிறவியில் சேரார் என்பது ஒரு தலை.

இவருடைய ஆன்மா சாந்தி யடைக. செட்டியாருடைய தலைப் புதல்வர் திரு. ரெ. பால சுப்ரமணியம் அவர்கள் தந்தை யினும் உயர்ந்த பண்புடையராய் விளங்குவது பாராட்டுக்குரியது. இவருடைய குடும்பம் குகன் அரு ளால் தகவுடன் வாழ்க.

இனிய குணச் செம்மல் இரத்தின சாமி
கனியமுத இன்பக் கடலான் —
தனிமையினில்
ஆடிக் கருணைபுரி அண்ணலடி
யான்இவனைக்
கோடிக் கொருவ ரெனக் கூறு.

# பிள்ளையாரும் குழந்தைகளும்

ஸ்ரீமதி சுசிலா சுந்தரவேலு ஈரோடு

உலகில் உள்ள எல்லா வடிவங்களிலும் சிறந்ததும், தேவர்களாலும் மாந்தர்களாலும் எப்பொழுதும், எல்லாக் காலங்களிலும், எந்த சமயத்திலும் போற்றி வழிபடும் மூர்த்தியானவர் விக்நங்களை அகற்றி நமக்கு நல்லருள் புரியும் கருணையுள்ளம் கொண்டவர் விநாயப் பெருமான் ஒருவரே.

தொன்று தொட்டு நம் முன்னோர் வழி முறையில் விநாயகர் வழிபாடு இருந்ததாலே அதன் பின்பற்றிவந்த நாமும் இன்று எங்கு எந்த இடத்தில், பிள்ளையார் உருவம் கண்டாலும் கை கூப்பி தொழுதும், தலையில் குட்டிக் கொண்டும் தோப்புக்கரணம் போட்டும் அவரை வழிபடத் தவறுவதில்லை.

மூன்று வயதுக் குழந்தை திக்கி, திக்கி, மழலை பேசும்போதே அதற்கு பாலூட்டி, சோறூட்டி, பேணி வளர்த்த நம் பண்டைய தாய்மார்கள் அதன் பிஞ்சு மனதில் தெய்வ பக்தியை ஊட்டலே என்று பிள்ளையார் உருவத்தைக் காட்டி

குள்ளக் குள்ளனே,
குண்டு வயிறனே,
வெள்ளைக் கொம்பனே,
விநாயகனைத் தொழுவோம்

என்று முதன் முதலில் குழந்தைக் கடவுளான பிள்ளையாரைக் காட்டி இளம்மனதில் பசுமரத்தாணி போன்று பதித்தார்கள்.

அதனாலேயே இன்று நாமும் நம்நாட்டின் பழய மரபின் படியும், அதன் பக்தியை வளர்ந்து வந்துள்ளோம்.

பிள்ளைகளைக் கவருவதில் பிள்ளையார் உருவத்தைவிட வேறு எளிமையானதும் வேடிக்கையானதும் வேறு ஒன்றுமில்லை. சாதாரணமாகவே குழந்தைகளுக்கு யானை என்றால் ஒரே சந்தோஷம். யானையின் உருவத்தையும், அதன் பெருத்த வயிறையும், நீண்ட துதிக்கையையும், உருண்டு திரண்ட பெரிய, பெரிய கால்களையும், அவ்வளவு பெரிய உருவத்துக்கு இருக்கும் சிறிய கண்களையும், முறம் போன்ற காதுகளையும் பார்த்தால். சிறுவர், சிறுமியருக்கு ஒரே கொண்டாட்டம் தான். அதுபோலவே, யானை

முகத்தானாகிய பெருமானிடமும் அவர்களுக்குப் பிரியம் அதிகம்.

அவர் தொந்தியும், கொம்பும், அவர்களைப் பரவசத்தில் ஆழ்த்து கின்றன. அவர் உண்ணும், கொழுக்கட்டை, அவல், பொரி, பருப்பு, பாயாசம், இவைகளும் சிறுவர்களுக்கு மிகவும் விருப்ப மான, சுவையான தின்பண்டங் களாம். அதனாலேயே நம் குழந்தைக் கவியான ஔவையார் அவர்களும் குழந்தைகளுக்கு விருப்பமான பண்டங்களே, உமா மகேஸ்வரனின் பிள்ளையான நம் பிள்ளையாருக்கும் விருப்பம் என்று தம் பாடலில்,

பாலும் தெளிதேனும்
 பாகும், பருப்பும்
இவை நான்கும் கலந்து நானுக்கு
 தருவேன் கோலம் செய்துங்கக்
கரிமுகத்து தூமணியே சங்கத்
 தமிழ் மூன்றும் நீ எனக்கு தா

என்று பிள்ளையாரிடம் வேண்டு கிறார்.

உணவு வகைகளிலேயே மிகவும் சத்து வாய்ந்த பொருள்கள் பாலும் தேனும், பாகும் பருப்பும் என்பதை தன் பாட்டாலே விளக்கி விடுகிறார். அதற்கு ஒப்ப பல, பல புலவர்கள் இயற்றியதும், மிகவும், சிறந்ததுமான சங்கத் தமிழ் மூன்றையும் கேட்கிறார். அதனால் சங்கத் தமிழுக்கு ஒப் பானது, பால், தேன், பாகு, பருப்பு என்று எளிய முறையில் எடுத்தியம்புகிறார் சிறுவர்களின் உடலுக்கு ஊட்டத்தைக் கொடுத்து, எளிதில் ஜீரணம் ஆகி குழந்தைகளை நல் ஆரோக்கியத் துடன் விளங்கச் செய்வதும் இவ் வுணவுகளே என்பதையும் பாட்டி லேயே விளக்கிக் காட்டுகிறார்.

மேலும் ஓரளவு வயது வந்த சிறுவர்களின் நாட்டமும் பிள்ளை யாரின் மேல்தான். பரிக்ஷை என்று வந்துவிட்டால் எங்கு அரசமரத்தடியில் பிள்ளையாரைக் கண்டாலும் "அப்பனே பிள்ளை யாரப்பா நான் பாஸ் செய்து விட்டால் உனக்கு 5 தேங்காய் சூறை விடுகிறேன்" என்று பிரார்த்தனை செய்து கொள்வதை நம் வீட்டிக் குழந்தைகளிடையே இன்றும் காணலாம்.

ஓம் என்ற பிரணவ ஸ்ருபியான வர் பிள்ளையார் அவர் உருவமும் ஓம் என்பது போலவே பார்வைக் கும் விளங்குகிறது. குழந்தை களின் பிரியமான கடவுள் அவர் களைப் போலவே அவரும் சாப் பாட்டு விசயத்தில் திவீரமான வர். குழந்தைகள் சிறுவயதில் எப்படி நன்கு சாப்பிட்டு கொழு, கொழுவென்று ஆரோக்கியத் துடன் விளங்கவேண்டும். என்ப தற்கும் அவரே ஒரு உதாரண மாக விளங்குகிறார்.

நம் இந்து மத முறைப்படி நாம் எந்தவொரு காரியத்தை ஆரம் பிக்கும் போதும் முதன் முதலில் வணங்குவது அவரையே. மஞ் சளிலோ அல்லது பசுஞ்சாணி யிலோ பிள்ளையார் உருவைப் பிடித்து அதற்கு அருகம்புல்

லேயோ அல்லது எருக்கம் பூவையோ வைத்து எடுத்த காரியத்தை ஒரு குறையும், விக்கிநமும் இல்லாமல் காப்பாற்றித் தர வேண்டும் என்று முதன் முதலில் அவரிடம்தான் வேண்டிக் கொள்கிறோம். அவரும் கருணையுடன் நம் வேண்டுகோளுக்கு செவி சாய்த்து நம் விருப்பங்களை நிறைவேற்றிவைக்கிறார்.

குழந்தைகளுக்கு முதன் முதலில் எழுத்தறிவிக்கத் துவங்கும் பொழுது ஓம் என்று பிள்ளையார் சுழி போட்டே பின் அரிஓம் என்று ஆசிரியர் பாடத்தை துவக்குவார். நாம் நம் முன்னோர்களின் வழிப்படியே நம் குழந்தைகளுக்கும் இளமையிலேயே பக்தியுணர்வை ஊட்ட பிள்ளையாரைக் காட்டி அவர்கள் இளம் நெஞ்சத்தில் முதன் முதல் கடவுள் நினைவை ஊட்டுவோமாக.

குழந்தைகள் வளரும் பருவத்தில் ஐந்து வயது விபரம் தெரித்ததிலிருந்து 18வயது வரை அவர்கள் உள்ளத்தில்பதியும் எண்ணங்களே அவர்களின் பிற்கால வாழ்க்கையின் அஸ்திவாரம் என்று முதியோர் சொல்லிக் கேள்வி. அதனால் அந்த முக்கியமான பிராயத்தில் பெற்றோர்கள் அவர்களின் இளம் பிஞ்சு நெஞ்சில் தெய்வ பக்தியை வளர்க்க வேண்டும். எவ்வளவுக்கு எவ்வளவு ஒரு சிறுவனின் உள்ளத்திலோ அல்லது ஒரு சிறுமியின் உள்ளத்திலோ பக்தியுணர்வு இளமையிலேயே வலுப் பெறுகிறதோ அவ்வளவுக்கு அவர்களின் வாழ்க்கையில் பண்பும், அடக்கமும், பெரியவர்களிடம் பயமும் மரியாதையும், மற்ற எல்லாவிதமான நல்ல குணங்களும் இடம் பெறுகின்றன.

நம் குழந்தைகளை நல்ல முறையில் உருவாக்கும் மகத்தான செயல் அவர்களின் பெற்றோர்களின் கையிலேயே இருக்கிறது.

சிறுவர்களின் எதிர்காலம் அவர்களின் இளம் வயதிலேயே அடங்கியிருக்கிறது. நாம் அவர்களை வளர்க்கும் முறையிலேயே அவர்களை சமூகத்திற்கு ஒரு நல்ல மனிதனை உருவாக்கி அளித்த பெருமையை அடைகிறோம். பிஞ்சு மனதில் நல்லதோ, கெட்டதோ உடனே பற்றிக் கொள்கிறது. அதனால் வருங்காலத்தில் நம் குழந்தைகள் நல்ல மனிதர்களாக பெயரெடுக்க வேண்டுமென்றால் நாம் நம் குழந்தைகள் விஷயத்தில் மிகுந்த அக்கறை எடுத்து இளமையில் அவர்களை கருத்துடன் கண்காணித்து வரவேண்டும்.

நம் முன்னோர்கள் பிள்ளையாரைக் காட்டி நம் மனதில் எல்லாம் பக்தியுணர்வை சிறுவயதிலிருந்தே பதித்தது போல நாமும் நம் குழந்தைகளும் ஓம்கார பிரணவ ஸ்வரூபியான பிள்ளையாரைக் காட்டி பிஞ்சு மனதில் பக்தியுணர்வை வளர்க்கக் கடமைப்பட்டவர்களாவோம்.

எளிமையே உருவானவர் பிள்ளையார் அவர் மாடமாளிகை

கூட கோபுரங்களை கேட்பதில்லை. குளக்கரையோ, அல்லது ஆற்றங் கரையோ, அரசமரத்தடியோ போதும் அவருக்கு. அதேபோல அவரைப் பூஜிப்பதற்கும் ரோஜா மலரோ மல்லிகையோ தேவையில்லை. சாதாரணமான எங்கும் எளிதில் கிடைக்கும் அருகம் புல்லும், வேலியோரம் கிடக்கும் எருக்கம்பூவும் போதும் அவருக்கு. ஆனால் அவர் உள்ளமோ மிக, மிக கருணை நிறைந்தது. வேண்டியவர்க்கு வேண்டியாங்கு வரங்களை அளித்து தன் பக்தர்களை காப்பதே அவர் விருப்பம். நம் ஆலயங்களிலும் எல்லாத் தெய்வங்களுக்கும் முதல் இடம் பிள்ளையாருக்கே. அவருக்கு வழிபாடு செய்தபின்னே மற்ற எல்லா தெய்வங்களுக்கும் வழிபாடு நடைபெறும்.

அதனால் இக்கட்டுரையைப் படிக்கும் அருமைக் குழந்தைகளே உருவிலும் வழிபாட்டிலும் மிக, மிக எளிமையானவரும இளம் சிறுவர்கள் நெஞ்சத்தில் நீங்காத இடம் பெற்றுவரும் வேண்டியவர் வேண்டியாங்கு வரங்கள் நல்குபவரும் கருணையும், அன்பும், இரக்கமும் கொண்டு நம் பாவங்களைப் போக்கி நமக்கு முன் நின்று வழிகாட்டியாக நிற்பவரும் எல்லா உலகங்களுக்கும், உயிர்களுக்கும், எப்போதும் துணை நிற்பவரான, ஞானத்தையும், கல்வியையும், ஊக்கத்தையும் அளிப்பவரான முழு முதற் கடவுளான எம்பெரு விநாயகன், கஜமுகன் யானை முகத்தோன் என்று பல பெயருடையவனுமான அவன் திருவடிகளை பக்தியுடன் பணிந்து எல்லா நலன்களையும் பெறுவோமாக.



# காளா மணிவிளக்கு

திரு. பெ. தூரன்



வண்டு ரீங்காரமிட்டுக் கொண்டு பறந்து செல்கிறது. தேன் நிறைந்த மலரை அடையும் வரையில்தான் அந்த ரீங்கார ஓசை, அதன் பிறகு ஓசையே இல்லை. இன்பமாகத் தேனை அருந்துவதில் ஈடுபட்டுவிடுகிறது.

அநுபூதிமான்களெல்லாம் இந்த வண்டைப்போலத்தான் இருக்கிறார்கள். இறைவனுடைய பேரின்பத்தை அடைந்துவிட்ட பிறகு அதை எடுத்துச் செல்ல முடியாதவர்களாகி சொல்லுகைக்கில்லை என்ற சும்மா இருக்கும் எல்லையுட் சென்று, மோனத்திலே நிலைத்து விடுகிறார்கள்,

இப்படிப்பட்டதென்று எப்படிச் சொல்லுவது என்று வியந்து கூறும்படியாக அப்படி அந்த இன்பம் இருக்கிறதாம்.

இங்ஙன் இருந்ததென்று
எவ்வண்ணம் சொல்லுகேன்
அங்ஙன் இருந்தது

என்று அந்த அநுபூதி நிலையின் ஆநந்தத்தைப்பற்றி வெகு சாமர்த்தியமாகத் திருவுந்தியார் என்ற தமது நூலிலே உய்யவந்த தேவநாயனார் அருளிச் செய்கின்றார். அந்த நிலையை அறிவினாலே அறிய முடியாது என்து அவர் மேலும் விளக்கம் செய்கின்றார். பாடலை முழுமையாகப் பார்க்கலாம்.

இங்ஙன் இருந்ததென்று
எவ்வண்ணம் சொல்லுகேன்
அங்ஙன் இருந்ததெனி றுந்தீபற
அறியும் அறிவதன் றுந்தீபற

இப்படி அந்த அனுபூதி நிலையைச் சொல்லாலே சொல்லமுடியாது என்பதைத் தாயுமானவர் உபமானம் ஒன்றைக் காட்டி நமக்குத் தெரிவிக்க முயல்கிறார்.

கல்லால மரத்தின் நிழலிலே அமர்ந்து கடவுளே ஜனகாதி முனிவர்களுக்கு அனுபூதி நிலையைப் பற்றி எடுத்துச் சொல்லுகிறாராம். சொல்லுகிறதோ கடவுள்; கேட்கின்றவர்களும் சாமானிய மானவர்களல்ல. அவர்களோ ஜனகாதி முனிவர்கள். கடவுள் அவர்களுக்கே தம் கரத்தில் சின் முத்திரையைக் காட்டிக் குறிப்பாகத்தான் சொல்லுகிறார். அப்படியானால் நாம் அந்த நிலை இவ்வாறு உள்ளதென்று சொல்லாலே சொல்லமுடியுமா? அப்படிச் சொல்ல எண்ணுவது ஒரு துரும்பைப் பற்றிக் கொண்டு கடலையே கடந்துவிடலாம் என்று துணிச்சல் கொள்ளுவதைப் போலத் தான் முடியுமாம்.

கல்லாலின் நிழல்தனில்
ஒருநால் வர்க்குக்
கடவுள்நீ உணர்த்துவதும்
கைகாட் டென்றால்
சொல்லாலே சொலப்படுமோ
சொல்லும் தன்மை
துரும்பு பற்றிக் கடல்கடக்கும்
துணிபே அன்றோ?

இப்பேர்ப்பட்ட அனுபூதிநிலை எப்படிக் கிடைக்கும்? அதைத் தான் ஞானிகள் முக்கியமாக நமக்கு எடுத்துச் சொல்லுகிறார்கள். ஆசை என்பது அற்றுப் போய்விட்டால் பேசமுடியாத இந்தப் பேரின்ப அனுபூதி கிடைத்துவிடுமாம். "ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்" என்று திருமூலர் பேசுகின்றார். அதையேதான்,

ஆசா நிகளம் துகளா யினபின்
பேசா அனுபூதி பிறந்ததுவே

என்று அருணகிரிநாதர் தமது கந்தர் அனுபூதியிலே தமது அனுபவமாகப் பாடுகின்றார்,

பேசானுபூதி பிறக்க என
துளத்தில்
ஆசா பசாசை அகற்றுவாய்

என்று குருஞான சம்பந்தமூர்த்திகளும் சொக்கநாதப் பெருமானை வேண்டிக்கொள்வதை நாம் காண்கிறோம்.

ஆசாநிகளம் — ஆசையாகிய சங்கிலி துகளாக வேண்டும் என்கிறார் அருணகிரியார்.

ஆசை என்னும் பேய் அகல வேண்டும் என்பது குருஞானசம்பந்தர் அருளிய உபதேசம்.

ஆசை படப்பட ஆய்வரும்
துன்பங்கள்
ஆசை விடவிட ஆநந்த மாமே

என்று திருமூலர் ஆநந்தம் எய்துவதற்கு வழி காட்டுகின்றார்.

வாக்கால் சொல்லமுடியாத பேரின்பமாகிய அனுபூதி நிலையை எய்துவதே மானிடப் பிறவியின் முடிவான நோக்கமாகும். அந்த நிலையானது ஆசாநிகளம் துகளாயினபின் பிறக்கின்றது.

அருணகிரிநாதரின் அனுபூதிப் பாடலை முழுமையாய் பார்ப்போம்.

ஆசா மணியும் துகிலும்
புனைவாள்
நேசா முருகா நினதன்
பருளால்

ஆசா நிகளம் துகளா யினபின்
பேசா அனுபூதி பிறந் ததுவே

நமக்கு வாய்த்திருக்கும்படியான மனம் இருக்கிறதே அது மிகப் பொல்லாதது. அது மனிதனை எப்படி எல்லாமோ ஆட்டி வைத்துவிடுகிறது. அதனால் தான் அதனை மனமெனும் குரங்கு என்று சொல்லியிருக்கிறார்கள். ஆசை என்னும் பேய் பிடிக்க அது தான் காரணமாக இருக்கிறது.

அந்த மனத்தோடு ஐந்து புலன்களும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. இவைகளும் நம்மைப் படாத பாடு படுத்தித் தொல்லையின் மூழ்கச் செய்கின்றன.

ஆனால் வேறு ஒரு வகையாக நினைத்துப் பார்த்தால் இந்த மனமும் ஐந்து புலன்களுமே நமக்குக் கிடைத்துள்ள அரிய கொடைகளாகவும் உள்ளன என்பது தெரியவரும். நெறியல்லா நெறியில் செல்ல முயலும் அவற்றைச் சரியான நெறியில் செலுத்தினால் அவையே நம் வாழ்க்கையின் பயனை அடைவதற்கு உதவுகின்ற சிறந்த சாதனங்களாக அமைந்து விடுகின்றன.

நல்லதைச் செய்து மனிதனை உயர்த்தவும் நல்லது அல்லாததைச் செய்து மனிதனைச் சேற்றிலே முழுகச் செய்வதும் இந்த மனமே என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் கூறும். பொழுது இதைத்தான் நமக்கு எடுத்துக் காட்டுகின்றார்:

நல்லது செய்து நரரை
உயர்த்தவும்
அல்ல செய்தங்கு அளற்றிடை
யாழ்ப்பவும்
வல்லதிந்த மனம் அலது
ஐயனே
இல்லை என்ன இயம்பும்
மறையெலாம்.

நமக்குக் கிடைத்துள்ள மனத்தைப்பற்றி வேதங்களே இவ்வாறு இயம்புகின்றன என்று சுவாமிகள் தெளிவுபடுத்துகிறார்.

கிடைத்தவற்றை வைத்துக் கொண்டே நாம் நினைத்த காரியத்தை சாதித்துக் கொள்வது தான் அறிவுள்ளவர்களின் செய்கையாகும். மனிதன் இப்படி எத்தனையோ சாதித்திருக்கிறான். மிகப் பழங்காலத்திலே காடுகளிலே வனவிலங்காகத் திரிந்த மாட்டைப் பிடித்து அதன் முரட்டுத்தனத்தையெல்லாம் மாற்றித் தானே மனிதன் அதைப் பல வகைகளில் பயன்படுத்திக் கொண்டிருக்கிறான்? அதனால் நமக்கு எத்தனை நன்மைகள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை நான் இன்று அதிகமாக விளக்கவேண்டியதில்லை. பசுவைத் தொழுகின்ற அளவுக்கு அது நமக்குப் பயன் தருகின்ற நல்ல விலங்காகி விட்டதல்லவா?

மாடு நமக்கு வெளியிலே உள்ள ஒரு விலங்கு. மனம் நமக்கு உள்



திரு. பெ. தூரன்

ளேயே இருந்து தொல்லை கொடுக்கும் விலங்கு. இந்த மனத்தையே ஒரு வில்லாக வளைத்து, ஐந்து புலன்களையும் நாணாக மாற்றி அறிவையே அம்பாகச் செய்து எய்து விட்டால் இந்தப் பிறவியின் பயனாகிய கனி உடனே கிடைத்து விடும்; மனத்தையும் புலன்களையும் வெறுத்து ஒழிக்க நினைப்பதைவிட அவற்றையே பயன்படுத்தி நமது காரியத்தைச் சாதித்துக்கொள்ள வேண்டும் என்கிறார் பத்திரகிரியார் என்ற ஞானி. அப்படி எப்பொழுது நான் செய்யப் போகிறேன் என்று தம்மைத் தாமே கேட்டுக் கொள்ளுவதுபோல அவர் நம்மைக் கேட்கிறார்.

மனதைஒரு வில்லாக்கி
  வான்பொறியை நாணாக்கி
எனதறிவை அம்பாக்கி
  எய்வதினி எக்காலம்?

இது அவருடைய பாட்டு.

நமது உடம்பே கோயிலாகவும் நமது மனம் ஓர் அடிமைபோல நாம் இட்ட வேலையைச் செய்யும் படியாகவும் "காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக" இருக்கும்படியாகச் செய்து ஈசனுக்குப் பூசை செய்ய வேண்டும் என்று அப்பர் சுவாமிகள் பாடுகின்றார். நாவுக்கரசராகிய அவர் சுருக்கமாக இதைச் சொல்லிவிடுகிறார். அவர் நாவுக்கரசரல்லவா?

இருதய கமலமே கடவுள் உறைகின்ற கர்ப்பக்கிருஹம் என்றும் தெள்ளத் தெளிந்தவர்களுக்குக் கள்ளப்புலன்கள் ஐந்தும் அக்கடவுளைக் காட்டுகின்ற ஜோதி விளக்குகளென்றும் திருமூலர் பாடும்போது இதே கருத்தைத் தான் அடிப்படையாக வைத்துக் கொண்டிருக்கிறார்!

உள்ளம் பெருங் கோயில்
  ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு
  வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச்
  சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும்
  காளா மணிவிளக்கே!

கள்ளப் புலன்களே உள்ளமாகிய பெருங் கோயிலில் இருக்கும்படியான ஈசனைக் காட்டும் விளக்குகள் ஆகிவிடுகின்றன. ○

# ஆழ்வார் கண்ட அஹோபிலம்



ஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி

பல க்ஷேத்திர மகிமையுடையது பாரத தேசம். இப் பரத புண்ணிய கண்டத்தில், ஸ்ரீ ந்ருஸிம்ஹ க்ஷேத்திரமாக இலங்குவது ஸ்ரீ அஹோபிலம்.

ஆந்திர நாட்டில், நல்லமலைப் பகுதியில், மூவாயிரம் அடிகள் உயரத்தில் அமைந்துள்ள குன்றில் குன்றாத அருள்பாலிக்கும் குணக் குன்றாக, அஹோபில க்ஷேத்திரத்தில் காட்சி தருகிறார் ஸ்ரீ ந்ருஸிம்ஹமூர்த்தி.

கடப்பையிலிருந்து எழுபத்தைந்து மைல்கள் கடந்து சென்றால், அஹோபில ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹப் பெருமாளைத் தரிசனம் செய்து, கண் பெற்ற பயனைப் பெறலாம். கடப்பை — கர்நூல் சாலையில் அர்லகட்டா வழியாகக் காரில் அஹோபிலத்திற்குச் செல்லலாம்.

பரமபத நாதனாகிய ஸ்ரீ பரந்தாமன் எடுத்த பத்தவதாரங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது ஸ்ரீ ந்ருஸிம்ஹ அவதாரம். அஷ்டாக்ஷரமாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய நாமத்தை யன்றி, வேறு எதுவுமே உச்சரித்தறியாத பக்தன் ஸ்ரீ பிரஹலாதனுக்காகத், தூணிலிருந்து வெளிபட்டுப் படுபாதகனான ஹிரண்யனை சம்ஹரிக்க பகவான் எழுந்த பயங்கரமான அவதாரம் ஸ்ரீ ந்ருஸிம்ஹ அவதாரம்.

அதிபயங்கர கோர வடிவாய், ஸ்ரீ ந்ருஸிம்ஹ மூர்த்தியாய்த் தோன்றி, ஹிரண்யனுடைய

மார்பைக் கூரிய நகங்களினால் கிழித்துக் கொன்ற பகவானுடைய அளவற்ற, ஆச்சரியப்படத் தக்க பெரும் பலத்தைக் கண்ட தேவர்கள், மகிழ்ச்சி ஆரவாரத்தில் தங்களை அறியாமல், "அஹோபலம்! அஹோபலம்!!" என்று கூறிப், பெருமானுடைய பேராற்றலை வியந்து போற்றினார்கள். அதனால் அஹோபிலம் அஹோபலம் ஆகியது.

அசுரனான ஹிரண்யனுடைய ஆகத்தைப் பிளந்தபின்னும், பகவானுடைய கொடுங்கோபம் தணியவில்லை. அதைத் தணிப்பதற்காகப் பெரிய பிராட்டியாராகிய ஸ்ரீ லக்ஷ்மீ தேவியைத் தேவர்கள் பிரார்த்தித்து ஐயனிடம் அனுப்புகிறார்கள். தேவதேவனாகிய ஸ்ரீ நரசிங்க மூர்த்தியிடம் தாயார் சென்று சீற்றம் தணிக்கிறார். சீற்றம் தணிந்த நிலையில் ஸ்ரீ லக்ஷ்மீ பிராட்டியாரைப் பெருமான் ஆலிங்கனம் செய்து கொள்ளுகிறார். அதைக் கண்ட அமரர்கள் "ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹாய நம" வென்று ஆனந்தம் பொங்க அஞ்சலி செய்கிறார்கள்.

கீழ் அஹோபிலத்தில் பகவான் ஸ்ரீதாயாரை அணைத்துக் கொண்ட திருக்கோலத்துடன் ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மூர்த்தியாக, ஸ்ரீ அமிர்தவல்லித் தாயாரைத் தழுவிய திருமூர்த்தியாக விளங்குகிறார்.

மேல் அஹோபிலத்திற்கு சென்றால், முற்றிலும் வேறொரு தனி உலகில் நாம் இருப்பதாக உணர்வோம். வியப்பில் நம்மை ஆழ்த்தும் பெருங்குகையாக விண்ணை யெட்டும் மேல் அஹோபிலம் விளங்குவது கண்டு, பகவான் ஹிரண்யனைக் கொன்ற புராண கால நினைவுகள் நம் மனத்தில் தோன்றக் காண்போம். மேல் அஹோபிலத்தில் ஸ்ரீ உக்ரந்ருஸிம்ஹரும் ஸ்ரீ செஞ்சு லக்ஷ்மீ தாயாரும் கோயில் கொண்டுள்ளனர்.

கீழ் அஹோபிலத்திலிருந்து மேல் அஹோபிலம் செல்லும் பாதை கரடு முரடு வாய்ந்த கடினமான பாதையாகத் தானிருக்கும். பகவானைத் தரிசிக்கும் பரமானந்தத்தோடு செல்லும் பக்தர்களுக்கு, அப்பாதை சிரமமாகத் தோன்றாது.

பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவரான திருமங்கை யாழ்வாரால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற சிறப்புடையது அஹோபில மஹாக்ஷேத்திரம். பத்துப் பாடல்கள் ஆழ்வார் பாடியுள்ளார். அஹோபில ஸ்ரீ ந்ருஸிம்ஹ மூர்த்தியைத் திருமங்கை யாழ்வார் தரிசித்த காலத்தில், பாதை அவ்வளவு இலகுவாக இருந்திருக்க இல்லை என்பது, ஆழ்வார் தாம் பாடிய ஐந்தாவது பாட்டில், "சென்று காண்டற் கரிய கோயில் சிங்கவேள் குன்றமே!" என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து தெரியவருகிறது.

அஹோபில மஹா க்ஷேத்திரத்தை அழகான செந்தமிழில்,

'சிங்கவேள் குன்றம்' என்று ஆழ்வார் போற்றிப் பாடியிருக்கிறார். திருவை யணைத்துக் கொண்டு திகழும் தேவனைக் கண்டு, அவர் பாடிய பாடல்கள் அஹோபில ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹனை நம் கண் முன் காட்டி, அப்பெருமானைத் தொழச் செய்கின்றன.

சிங்கவேள் குன்றம் எனப் படும் அஹோபிலம் ஆழ்வாருக்கு எங்ஙனம் காட்சி யளித்தது? நெல்லி மரங்கள் நிறைந்து காணப்பட்டதாம் சிங்கவேள் குன்றம். அந் நெல்லி மரங்களின் வேர்கள் அடியில் இறங்கிக் கற் பாறைகளை யுடைத்தனவாம். மேலும், பனைமரத்தோலைகள் சிங்கவேள் குன்றத்தில் 'சல சல' வென்று சப்தித்தனவாம்! அது மட்டுமா? செல்லும் வழியெல் லாம் 'சில் சில்' என்று சுவர்க் கோழிகள் ஓசை செய்தனவாம். இவ்வோசை மாறாத சிங்கவேள் குன்றத்தில், இறைவன் தாமரை யில் வாசஞ்செய்யும் எழிற்கமல நாயகியான பெரிய பிராட்டி யாரை, ஸ்ரீ அமிர்தவல்லித் தாயாரை அணைத்துக் கொண்டு எழுந்தருளியிருக்கிறான். ஆயிரம் திருத்தோள்களுடைய அத் தேவாதிதேவனை, அஹோபில நாயகனைத் தொழுது, அடைந்த பிறவியின் அரும்பயனைப் பெறு வோம் என்று, தமது மனத்தைப் பார்த்துக் கூறுவதாக அமைந்த ஸ்ரீ திருமங்கையாழ்வாரின் ஒன்ப தாவது பாடல் நம் சிந்தனைக் குரி யது. வந்தனைக்கும் உரியது. இதோ அந்த பாடல்!

நல்லை நெஞ்சே! நாம்
தொழுதும்
நம்முடை நம்பெருமான்
அல்லி மாதர் புல்கநின்ற
ஆயிரந் தோளனிடம்
நெல்லி மல்கிக் கல்லுடைப்பப்
புல்லிலையார்த் ததர்வாய்ச்
சில்லி சில்லென் றொல்லறாத
சிங்கவேள் குன்றமே!

ஆழ்வார் கண்ட அஹோபில நாதனைச், சிங்கவேள் குன்றத் தமர்ந்த ஸ்ரீலக்ஷ்மீயோடு கூடிய தேவனை இன்றே சென்று, நன்றே தொழுது, உய்வோமாக. அஹோ பில ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மூர்த்தி யின் திருவருள் அனைவருக்கும் ஸித்திப்பதாக!



இப்பிரபஞ்சம் முழுவதும் பரந்து நிற்கும் இறைவனிடம் வேண்டிக் கொள்க. அவன் தனது கருணையை உன் மீது பொழிவான்.

— ஸ்ரீசாரதாதேவி

# பார்க்க வேண்டிய இடம் அஸ்ஸாம்

மிஸ். திரிபுரா நாராயணன்

அஸ்ஸாம் மாநிலம் தேயிலைக்கு பெயர் பெற்றது. எத்தனையோ வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு தனது தரத்தையும், பெருமையும் நிலை நாட்டி இருக்கிறது. குடிக்கக் குடிக்க சுவை குன்றாத தேனீர் இந்த ஊருக்கு புகழை தேடிக் கொடுத்து இருக்கிறது.

மழை அதிகமாகப் பெய்யும் இந்த ஊர் சீதோஷ்ண நிலைக்கு தேனீர் தான் ஒரு சுவையான டானிக். அஸ்ஸாம் மாநிலத்தில் கண் நிறைந்த காட்சிகள் இந்த தேயிலை தோட்டம் தான். எங்கு பார்த்தாலும், அடர்த்தியாக காடு போல் வளர்ந்திருக்கும் இந்த தேயிலை தோட்டங்களை பார்ப்பதே கண்ணுக்கு இனிய காட்சி. தேயிலையை பறிக்க வரும் பெண்களின் தோற்றம் அலாதியானது. உரிய காலத்தில் ஒவ்வொருவரும் ஒரு கோன் வடிவத்தில் இருக்கும் ஒரு பெரிய கூடையை எடுத்துக்கொண்டு வரிசையாக நின்று தேயிலை பறிப்பதை இன்றெல்லாம் பார்த்துக் கொண்டு இருக்கலாம். அயராத உழைப்பினால் களைத்து காணப்படும்பொழுது ஒருகப் தேனீர் பருகினால் களைப்பு இருந்த இடம் தெரியாமல் பறந்து விடும். இந்த ஊர் மக்கள் அதிகம் விரும்பி பருகுவது இந்த தேனீரை தான்.

அஸ்ஸாமில் எத்தனையோ சிறிய ஊர்கள் இருக்கின்றன. அவற்றில் தேஸ்பூர் ஒரு சிறந்த இடம். அநேக ஊர்களை பார்க்கும் வாய்ப்பு ஏற்பட்ட எனக்கு இந்த தேஸ்பூருக்கு வரவும் சந்தர்ப்பம் கிடைத்தது. கட்டுக்கு அடங்காத பிரம்மபுத்ரா நதியின் ஓரத்தில் அமைந்திருக்கும் எத்தனையோ அழகான ஊர்களில் இதுவும் ஒன்று. இயற்கை எழில் சூழ இந்த ஊர் மனத்திற்கு அமைதியை தரும்.

தேஸ்பூர் சிறிய ஊரானாலும், பார்ப்பதற்கு சுத்தமாகவும் அழகாகவும் இருக்கிறது. அடிக்கடி இங்கு, நில அதிர்ச்சி ஏற்படுவதால் வீடெல்லாம் மூங்கிலால் கட்டப்பட்டு இருக்கிறது. கூரையெல்லாம் மரத்தாலும், நடுநடுவில் பெரிய பெரிய சட்டங்களை கொடுத்து, மூங்கிலின் உதவியால் இங்கு வெகு சுலபமாக விடுகட்டி

விடுகிறார்கள். பார்ப்பதற்கே வேடிக்கையாக இருக்கும்! அநேக இடத்தில் குழாய் வசதிகள் கிடையாது. கிணற்று நீர் தான் பெரும்பாலும் உபயோகிக்கிறார்கள். காடுகள் நிறைந்த அஸ்ஸாம் மாநிலத்தில் விதவிதமான பூச்சிகளுக்கும் விஷ ஜந்துக்களுக்கும் குறைவே இல்லை.

வெய்யில் காலத்திலும் மழை காலத்திலும் இவைகளை நிறைய காணலாம். அவற்றில் ஏராளமாகப் பார்ப்பது நத்தை தான். நத்தை என்றால் நம் ஊர் பக்கம் மாதிரி சின்னதாக இருக்காது. பெரிய ஓடோடு நத்தை பார்ப்பதற்கு மிகப் பெரியதாக இருக்கும். தேஸ்பூரில் மழை காலம் வந்து விட்டால் எங்கு பார்த்தாலும் ஓடோடு ஊர்ந்து செல்லுகின்ற இந்த நத்தைகளை பார்க்கலாம். பார்ப்பதற்கு அருவருப்பாக இருக்கும் இந்த நத்தை இந்த ஊரில்தான் மிகப் பெரிதாக இருக்கிறது.

இதை தவிர விஷ பாம்புகளும், தேளும், எட்டுகால்பூச்சி இன்னும் நிறைய வகையான பூச்சிகள் இங்கு ஏராளம். எல்லாவற்றையும் விட தேஸ்பூர் கொசு ஒரு ஆளையே தூக்கி போய்விடும் அளவு பெரிதாக இருக்கிறது! எது இருந்தாலும் இல்லாவிட்டாலும் இந்த ஊரில் 'கொசுவலை' கட்டாயம் வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் இதை பார்க்கலாம்.

பூச்சிகள் அதிகமாக இருப்பதால் தரையில் படுக்க முடியாது. ஒரு சிறிய குடிசை ஆனாலும், அதில் ஒரு கட்டில் கட்டாயம் இருக்கும். பூச்சி பொட்டுகள் ஒரு புறம் இருக்க, நம்மை வியப்பில் ஆழ்த்துவது ஒரு செடி! அது தான் நாம் அன்றாடம் சமையலுக்கு உபயோகிக்கும் கருவேப்பிலை! 'கருவேப்பிலை கண்ணு மாதிரி ஒண்ணே ஒண்ணு' என்று ஒரு வசனம் உண்டு. அதிக சிரத்தையுடன் வளர்த்தால்தான் அது நன்கு வளரும். ஆனால் இந்த ஊரிலோ அந்த சிரமமே இல்லை. கருவேப்பிலை காடே இங்கு பார்க்கலாம். எங்கு பார்த்தாலும், எவர்கேட்பாரின்றி அடர்த்தியாக இங்கு வளர்ந்து இருக்கிறது. உடனே அது காட்டு கருவேப்பிலை என்று எண்ணி விடாதீர்கள். நம்ம ஊர் பக்கம் மாதிரி நல்ல மணம் உண்டு! தேஸ்பூரில் காசு இல்லாமல் கிடைப்பது எது என்றால் இந்த கருவேப்பிலை தான்.

மற்றபடி சாமான்கள் விலை யாவும் மிகவும் அதிகம். அஸ்ஸாமில் ஷில்லாங் போன்ற இடங்கள் போய்விட்டால் அப்பப்பா! நம்மால் சமாளிக்கவே முடியாது. ஷாக் அடிக்கிற விலை தான். கருவேப்பிலை இங்கு எப்படி வளருகிறதோ, அதே மாதிரி வாழை மரங்களை எங்கும் காணலாம். மேடு, பள்ளம், மலை என்று இல்லாமல் ஆயிரக்கணக்கில் இந்த மரங்களைக் காணலாம். ஆனால் நம் ஊர் மனிதர்களை போல் வாழை இலையை அஸ்ஸாம் மக்கள் உபயோகிப்பதே இல்லை. வாழை சம்பந்தமாக எதுவும்

இங்கு மலிவாக கிடைக்கிறது. ஐந்து பைசாவிற்கு பெரியதாக ஒரு வாழைக்காய் வேண்டுமா, தேஸ்பூருக்கு வாருங்கள்! நிறைய சாப்பிடலாம். இங்கு ஒரு ஜோடி வாழைக்காய் விலை 10 பைசா.

தேஸ்பூரை சுற்றி நிறைய இடங்கள் உல்லாசமாக பொழுது போக்க இருக்கின்றன.

இந்த ஊர் மனிதர்கள் அதாவது, அஸ்ஸாமில் நல்ல படிப்பாளர்களாகவும், செல்வந்தர்களாகவும் இருக்கின்றனர். ஒவ்வொருவரும், நிலம், சொந்தவீடு வைத்து கொண்டு சந்தோஷமாக இருக்கிறார்கள். அரிசி இங்கு நிறைய விளைகிறது. அநேகமாக எல்லோரும் வீடு கட்டி கொண்டு இருக்கிறார்கள். இங்கு பொதுவாக பெண்கள் உடுத்திக் கொள்ளும் உடைக்கு பெயர் 'மேகலா சாதர்.' பேர்தான் புது மாதிரியாக இருக்கிறதே தவிர நம்ம ஊர் பாவாடை மேலாக்கும் இதுவும் ஒன்றுதான்! சின்ன பெண்கள் முதல் கொண்டு, கல்யாணமாகி பெரியவர்கள் வரை இந்த மாதிரிதான் உடுத்துகிறார்கள்.

அஸ்ஸாம் சில்க் இந்த ஊரில் பெயர் போனது. அதில் தான் பாவாடையும், மேலாக்கும் போடுகிறார்கள். அவர்கள் கட்டிக் கொண்டு போவதை பார்ப்பதற்கே வேடிக்கையாக இருக்கும். புடவை அவர்கள் கட்டுவதில்லை. அநேகமாக எல்லோரும் சாப்பிட்ட பிறகு 'பான்' (வெற்றிலை) போடுகிறார்கள். 'தாமுல்' என்னும் ஒரு வித பாக்கை உபயோகிக்கிறார்கள். இதை பழக்கம் இல்லாதவர்கள் போட்டால் தலையை சுற்றும்.

அஸ்ஸாம் மக்கள் பொதுவாக எல்லோரிடமும் அதிகமாக பழகுவதில்லை. அவர்கள் வீடு, குடும்பம் என்று இருந்து விடுகிறார்கள். இந்த ஊர் மக்கள் பார்ப்பதற்கு நல்ல நிறமாகவும், நல்ல தேகத்துடனும் இருக்கிறார்கள்.

அஸ்ஸாமில் பார்க்க வேண்டிய இடங்கள் நிறைய இருக்கின்றன. அவற்றில் கௌஹாத்தி, ஷில்லாங், ஜோர்ஹாட், டிப்ருகர், காசிரங்கா, டிக்பாய் போன்றவை குறிப்பிடத்தக்கவை. கௌஹாத்தியில் நான்மதி என்னும் இடம் மிகவும் புகழ் பெற்றது. Oil India Refinery அங்கு இருக்கிறது. இரவில் அந்த இடங்கள் பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கும். டிக்பாயில் ஆயில் கம்பெனி இருக்கிறது. அஸ்ஸாம் ஆயில் பிரசித்தி பெற்றது.

கௌஹாட்டியில் கர்மாக்யா கோவில் மிக சக்தி வாய்ந்தது. எத்தனையோ ஊர்களிலிருந்து மக்கள் திரள் திரளாக வந்து அம்மனை தரிசிக்கிறார்கள். கோவிலில் எப்பொழுதும் கூட்டத்தை காணலாம்.

சிவன் கோவில் பார்க்க வேண்டுமா ஜோர்ஹட் அருகில் சிப்ஸாகர் என்னும் இடத்திற்குப்

போனால் பார்க்கலாம். இங்கு பெரிய சிவலிங்கம் இருக்கிறது. சிவராத்திரி அன்று இந்த கோவில் திருவிழா மாதிரி காட்சி அளிக்கும். குளிர்ந்த மலை பிரதேசத்திற்கு போகவேண்டுமா? இருக்கவே இருக்கிறது ஷில்லாங். இங்கிருந்து சுமார் 200 கி. மைல் தொலைவில் இருக்கிறது. என்னுடைய ஷில்லாங் பயணம் மறக்க முடியாதது. இயற்கை அன்னை அப்படியே தாண்டவமாடுகிறாள். கடல் மட்டத்திலிருந்து 5000 அடி உயரத்தில் அமைந்திருக்கும் ஷில்லாங் இயற்கைக் காட்சிகளை ரஸிப்பதற்கு ஒரு அருமையான இடம். மலைஜாதி மனிதர்களை பார்ப்பதற்கே அழகாக இருக்கும். அவர்கள் குழந்தைகளை முதுகில் சுமந்து செல்கிறார்கள். ஒவ்வொருவரும் செக்க செவேலென்று பார்ப்பதற்கு அழகாக இருக்கிறார்கள். எங்கு பார்த்தாலும் ரோட்டிற்கு இரண்டு பக்கங்களும் பைன் என்னும் ஒரு வகை மரங்கள் நிறைய வளர்ந்து இருக்கின்றன.

சிறிய சிறிய ஏரிகளும், நீர் வீழ்ச்சிகளும் பார்க்க பார்க்க திகட்டாதவை. அவற்றில் 'Ward Lake' புகழ் பெற்றது. நிறைய மீன்கள் இருக்கும் அந்த ஏரியில் கட்டணம் செலுத்திவிட்டு யார் வேண்டுமானாலும் போட்டில் போகலாம். நம்ம ஊர் பக்கம் மாதிரி ஒரு ஹோட்டலும் இருக்கிறது. பசியுடன் அங்கு போனேமானால் பண்டங்களின் விலையை பார்த்து மயக்கமே வந்து விடும். ஒரு பிளேட் இட்லி விலை 1ரூபாய். ஒரு தோசை 1ரூபாய்! மூச்பேச்சு இல்லாமல் பணத்தை கொடுக்க வேண்டும். காசில்லாமல் ரஸிப்பது இயற்கை காட்சி ஒன்று தான். அதற்கு பஞ்சமே இல்லை.

யானைமேல் போக ஆசையாக இருக்கிறதா, அதுவும் தேஸ்பூரிலிருந்து 50மைல் தொலைவில் இருக்கும் காசிரங்கா என்னும் இடத்திற்கு போய்விட்டால் ஆசை தீர்ந்துவிடும். KAZI RANGA WILD LIFE SANCTURY அஸ்ஸாமில் புகழ்பெற்றது. அங்கு காட்டு மிருகங்களை அடர்த்தியான காட்டில் சுற்ற விட்டு இருக்கிறார்கள். அதில் ஏராளமாக காணப்படுவது ரைநோ என்னும் ஒருவகை மிருகம். இரண்டு மணி நேரம் அடர்ந்த காட்டிற்குள் யானை மேல் ஏறிகொண்டு ஏராளமான மிருகங்களை கண்டுகளிக்கலாம். அப்பப்ப! பயங்கர அனுபவம்!

இந்த மாதிரி அநேக சிறப்புகளையும், எழில்களையும் கொண்ட அஸ்ஸாம் மாநிலம் பார்க்க வேண்டிய ஒரு இடமாகும். சுவையான தேனீரையும், இன்பமூட்டும் இயற்கை காட்சிகளையும் ரஸிக்க வாருங்களேன் பெருமை வாய்ந்த அஸ்ஸாமுக்கு!!



# வாழ்வது எப்படி?

திரு. டி. டி. பி. எதிராஜ்

மனிதர்கள் பலர் தம் வாழ்நாளின் ஆரம்பத்தில் மனம் போனபடி தான்தோன்றித் தனமாக நடந்து கொண்டு பிற்காலத்தில் பல இன்னல்களுக்கு ஆளாகி "வாழ்க்கையில் என்ன இருக்கிறது?" என்று புலம்புகிறார்கள். ஆனால் ஆரம்ப முதற்கொண்டே சீராகவும் சில கட்டு திட்டங்களுக்கு உட்பட்டும் வாழ்ந்தவர்கள் "வாழ்க்கை வாழ்வதற்கே" என்று திடமாகக் கூறுகிறார்கள்.

நம்மில் பலர் நினைப்பது போல் நம் தோல்விகளுக்கும் சந்தோஷமின்மைக்கும் பிறர் காரணமல்ல. வெற்றியானாலும் தோல்வியானாலும், சந்தோஷமானாலும் துக்கமானாலும் அதற்கு அவரவர்கள் மனமும் நடவடிக்கைகளுமே காரணமாகும்.

ஒரு மனிதன் சுயநலவாதியாகவும், எப்பொழுதும் பிறர் மீது குற்றங் குறைகளைக் கண்டு பிடித்துக் கொண்டும், தன்னைப் பற்றி மிகவும் பெருமையாகவும் பிறரைப் பற்றி சிறுமையாகவும் பேசிக் கொண்டும், வாழ்நாட்களைக் கழித்தால், அவன் பல இன்னல்களுக்கும் ஏச்சுக்கும் ஆளாகி வாழ்க்கையில் சலிப்படைந்து போகவேண்டிவரும்.

அதற்குப் பதிலாக தீய குணங்களையும் தீய பழக்க வழக்கங்களையும் அறவே தவிர்த்து நல்லபண்புகளையும் ஒழுக்கங்களையும் மேற்கொண்டு வந்தால் வாழ்க்கை ஒரு உன்னதமான பச்சைப்பசும் பூஞ்சோலையாகவும் சுவர்க்கமாகவும் மாறும் என்பதில் சிறிதேனும் சந்தேகமில்லை.

இன்பம் நிறைந்த வாழ்க்கை நம் மனத்தில் எழும் எண்ணங்கள் ஒவ்வொன்றும் நம் உள்ளத்திலும் உடலிலும் உறைந்து நமது செய்கைகளை இயக்குகின்றன. ஆதலால் எந்தக் காலத்திலும் மனதில் தூய, உயரிய எண்ணங்களையும், நற்சிந்தனைகளையும், மிதமான சந்தோஷத்தையும், சஞ்சலமின்மையையும் இருத்திக்கொண்டால் வாழ்க்கை மிக சுலபமாகவும், நளினமாகவும்சென்று எல்லையில்லா ஆனந்தத்தை அளிக்கும்.

நமது சக்திக்கு ஏற்றவாறும், பெருவாரியான மக்களுக்கு இன்பம் பயக்க வல்லதுமான ஒரு

லக்ஷியத்தை மேற்கொண்டு அதனின்றும் பிறழாது வாழவேண்டும். இதனால்தான் புத்தர், விவேகானந்தர், காந்தி அடிகள் போன்றவர்கள் இன்று உலக மகான்களாகத் திகழ முடிகின்றது.

எண்ணிலா அதிசயங்கள் நிறைந்த இவ்வுலகம் இறைவனால் படைக்கப்பட்டது என்பதையும், அவனாலன்றி ஓர் அணுவும் அசையாது என்பதையும், அவனே மனப்பூர்வமாக நம்பி வழிபட்டால் எதையும் தாங்கும் இதயமும் மன நிம்மதியும் கிட்டும் என்பதையும் உணரவேண்டும்.

எனவே நன்னெறியைக் கடைப்பிடிப்போம், மனதை சந்தோஷமாகவும் உடலை ஆரோக்கியமாகவும் வைத்துக்கொள்வோம். தர்மத்திற்கும் தெய்வத்திற்கும் பயந்து நடப்போம். மக்களிடமும் மாக்களிடமும் அன்பு காட்டுவோம். ஆய்ந்து அறிந்த கடமைகளை குறைபாடின்றி செய்வோம், தரும நூல்களில் சொல்லியபடி நடப்போம்.



# நகரத்தார்களின் பொதுநோக்கு

'தமிழண்ணல்' இரா. பெரியகருப்பன். எம். ஏ.,

நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தினர் அனைவரும் சைவ சமயத்தினராக விளங்குகின்றனர். அதன் பயனாகச் சைவ சமயத்தின் பொதுநோக்கு அவர்கள்பாலும் விளக்கக் காண்கிறோம்.

முதலியார், நாயுடு, பிள்ளைமார் போன்ற பிற சமூகத்தினர்களில் சைவநெறிப் பட்டவர்களும், வைணவ நெறிப்பட்டவர்களுமாக இரு சாராரும் உளர்.

நகரத்தார்பால் இவை போன்ற பிரிவினை கிடையாது. அனைவரும் சைவரே. ஆயினும் காழ்ப்பற்ற சமரச நோக்கத்தால் திருமாலை வழிபடுவதிலும் அவர்கள் சிறந்து விளக்குகின்றனர்.

நகரத்தார் சமூகத்தினர் பல திருமால் கோயில்களை உருவாக்கிப் பேணி வருகின்றனர். செட்டிநாட்டின் முதன்மை வாய்ந்த நகரமாகிய காரைக்குடியில் கல்லுக்கட்டி மேல் கரையில் கிருஷ்ணன் கோயில் இருக்கிறது. காரைக்குடிக்கு அடுத்த அரியக்குடியிலிருக்கின்ற சீனிவாசப்பெருமாள் கோயிலுக்கு, நகரத்தார் பல இலட்ச ருபாய்களைச் செலவிட்டுள்ளனர்.

தேவகோட்டை நகரத்தார் வடகலைப் பெருமாள் கோயில், தென் கலைப் பெருமாள் கோயில் என இரண்டு கோயில்கள் கட்டியுள்ளனர். இக் கோயில்களின் திருப்பணிகளும் அன்றாடப் பூசை நடைமுறைகளும், வைணவர்களல்லாத சைவர்களாகிய நகரத்தார்களின் பொருளுதவியால் நிகழ்த்தப் பெற்று வருகின்றன.

மேலும், அரண்மனைச் சிறுவயல் நகரத்தார் தம் செலவில் பெருமாள் கோயில் ஒன்று கட்டியுள்ளனர். கீழச் சிவற்பட்டி, கொற்ற மங்கலம், செம்பொன்னூர், பாகனேரி ஆகிய ஊர்களிலும் நகரத்தார், பெருமாள் கோயில்களைக் கட்டியுள்ளனர். நாட்டரசன் கோட்டை நகரத்தார்கள், அலர்மேலு மங்கைத் தாயார் உடனிருக்கும் வேங்கடேசப் பெருமாள் கோயில் ஒன்று கட்டியுள்ளனர்.

வைணவத் தலமாகிய திருக்கோட்டியூர்க் கோயில் திருப்பணிகளிலும் அதன் திருவிழா நிகழ்ச்சிகளிலும் இவ் வினத்தவர்க்குச் சிறப்பான பங்குண்டு. வைணவர் போற்றும் தலமாகிய திரு

மெய்யத்திலிருக்கின்ற சத்திய மூர்த்தி கோயிலிலுள்ள கல் திரு மேனிகளுக்கு இராமச்சந்திர புரம் தி. நா. முத்தையா செட்டி யாரவர்கள் தைலக் காப்பிட்டுள் ளார்கள். அரிமளத்திற்கு அருகே யுள்ள கடைக்குடிப் பெருமாள் கோயிலில் நடைபெறும் கசேந் திர மோட்ச விழாவிற்கு நகரத் தார் பெண் மக்கள் பெரிதும் விரும்பிப் போய் வருகின்றனர்.

தில்லை நடராசப் பெருமான் எல்லையிலா இன்ப நடம் புரியும் பொன்னம்பலத்திற்கு அணிமை யில் கோவிந்தராசப் பெருமா ளின் கோவிலொன்று உளது. அக்கோயில் சிதைந்து இடிந்து விழும் நிலையிலிருந்த போது, சைவர்களுக்கும் வைணவர்களுக் கும் முரண்பாடு ஏற்பட்டமை காரணமாகப் பழுது பார்க்கப் படாதிருந்தது. அவ்விரு திறத் தாரையும் அமைதியான முறை யில் உடன்படச் செய்தவர் நகரத் தாராகிய அண்ணாமலை அரசரே ஆவார். அதன் பயனாகக் கோவிந்தராசருக்குப் புதிய கற் கோயிலமைந்து 1934 இல் குட முழுக்கு நடைபெற்றது.

நகரப் பெருங்கோயிலாகிய இளையாற்றங்குடியில் ஆதிகேச வப் பெருமாள் கோயில் இருக்கி றது. இக் கோயிலைக் கழனிவா சற் குடியார் என்ற பிரிவைச் சேர்ந்த நகரத்தார் கட்டியுள்ள னர். இரணியூர் நகரப் பெருங் கோயிலில் இராச நாராயணப் பெருமாளுக்கு ஒரு கோயில் கட் டப்பட்டிருக்கிறது.

தனி ஒருவர் இல்லத்திற்குள் ளேயே பெருமாள் கோயில் ஒன்று இருக்கும் காட்சியையும் தேவகோட்டை நகரில் கண் டேன். உயர்திரு. பி. எஸ். சாத் தப்ப செட்டியார் அவர்கள் 1943-இல் தம் மாளிகையில் ஒரு பெருமாள் கோயிலை அமைத்து அதனருகே பூசகர்க்கும் வீடுகட் டிக் கொடுத்திருக்கிறார்கள். இங்கு இரண்டு காலப் பூசை நடைபெற்று வருகிறது. மூல விக்கிரகம் கல்லாலும், உற்சவ விக்கிரகம் தங்கத்தாலும் ஆனவை.

நகரத்தார் வாழுமிடங்களில் அனைத்துச் சமயத்தவர்களும் அன்பு வாழ்வு வாழ்கின்றனர். நகரத்தார் தமது சமயத்தில் ஆழ்ந்த பற்றுடையவர்கள். பழக்க வழக்கங்களிலும் சமயம் மொழி கலைபண்பாட்டுத் துறைக ளிலும்அவர்களைப் பழமைவிரும்பி கள் (Conservatives) எனலாம்.

சமுகக் கட்டுப்பாடுகட்டு உட் படும் மனப்பான்மை படைத்த வர்கள். பிற சமயத்தவர்கள் தத்தம் சமயங்களில் எவ்வளவு பற்றுக்கொண்டிருப்பினும் அச் காரணத்திற்காக அவர்களை இந் நகரத்தார் வெறுப்பதில்லை.

பிறரும் தம்மைப்போல வாழ எண்ணும் இப் பெருந்தன்மை மிக்க பொது நோக்கு போற்று தற்குரியதாகுமன்றோ!

# வேலாயுதமும் சூலாயுதமும்

வேல், முருகனுக்கே உரிய ஆயுதம். இந்த ஆயுதத்தை ஏந்தும்போது முருகனுக்கு வேலன், வேலாயுதன், வேலாயுதப் பெருமான், வடிவேலன், சக்திதரன் என்ற பெயர்கள் வழங்குகின்றன. வடி என்பது கூர்மையைக் குறிக்கும்.

விஷ்ணுவின் பிரயோகச் சக்கரம் போல முருகனுடைய வேல் ஒரு பிரயோக ஆயுதம். கையை விட்டுப்போய் மீண்டும் கையில் வந்து அமரும் தன்மையது. பழைமையான திருவுருவங்களில் இந்த வேலினைக் காணலாம்.

பிரயோக ஆயுதமாகிய வேலின் அடையாளமாக இப்போது ஆலயங்களில் முருகன் கையில் ஓர் ஆயுதம் கொடுக்கப்படுகிறது. கையில் வைத்துக் குத்துவதாக உள்ள நிலையில் அது வடிக்கப் பெற்றிருக்கிறது. இத்தகைய வேல் அம்பாளுக்கும் உண்டு.

ஆனால் மாரியம்மனாகவோ பிடாரியாகவோ, துர்க்கையாகவோ உக்கிரமான நிலையில் இருக்கும்போது மட்டுமே இவ்வாயுதம் அம்பாளுக்கு உரியது.

சத்தி என்னும் ஒருவகை வேலும் முருகனுக்கு உண்டு. அம்பு போன்ற அமைப்பும் உச்சியில் மூன்று வேல்களைச் சேர்த்தது போன்றும் சத்தி இருக்கும்.

சூல்வேல் என்பது சூலாயுதம் போன்ற வேல், இதைப் பெரும்பாலும் முருகனே ஏந்துவான்.

முருகனுடைய தேவியாகிய வள்ளியம்மை இச்சா சக்தியாகவும் தெய்வயானை கிரியா சக்தியாகவும் இருப்பதுபோல அவனுடைய வேல் அவனுடைய ஞான சக்தியாக விளங்குகிறது. நாசிக் பஞ்சவடியில் முருகன் மணமாகாக் கோலத்தில் இருப்பினும், ஆற்றல், அருள் அறிவு மூன்றும் அடங்கிய நிலையிலேயே முருகன் உள்ளான். தமிழ் நாட்டில் அந்தத் தன்மைகளை வெளிப்படுத்திக் காட்டுகிறோம். மராட்டியத்தில் வெளிப்படுத்துவதில்லை. எனினும், இரு மாநிலங்களிலும் முருக தத்துவம் ஒன்றே.

மராட்டிய மாநிலத்தில் கணபதிக்கே எல்லாச் சிறப்புக்களும் உண்டு. தமிழ் நாட்டில் அனைத்துப் பெருமைகளும் முருகனுக்கே உண்டு. கணபத்யம் என்பது பரமேசுவரனை விநாயகர் என்ற மூர்த்தியாக வழிபடுவது. முருக வழிபாடு என்பது பரமேசுவரனை முருகனாக வணங்குவது. கணபதியே பரமேசுவரன். முருகனே பரமேசுவரன். சிவபெருமானின்

25 மூர்த்தங்களுள் கணபதி ஒன்று. முருகன் ஒன்று.

சூலாயுதம், உருவமாக உள்ள பரமேசுவரனுக்கு மட்டுமே உண்டு. அருவமாக உள்ள சிவ பெருமானுக்குச் சூலாயுதம் கிடையாது.

சூலாயுதத்தின் மேற்பகுதியில் மட்டும் மும்முனைகள் உண்டு. வேலாயுதத்தில் மேலும் கீழும் மும்முனைகள் உண்டு.

சூல்தல் என்பது சங்க இலக்கியத்தில் குத்துதல், வெட்டுதல் அறுத்தல் என்ற பொருள்களில் ஆளப் பெற்றிருக்கிறது. சூல் என்னும் சொல் கூர்மையைச் சுட்டும்.

சூலாயுதம் தாங்கும்போது சிவனுக்குச் சூலபாணி என்ற பெயருண்டு.

காளி, பத்ரகாளி, யமன் ஆகியோரும் சூலாயுதம் தாங்குவர். சூலம் ஏந்திய துர்க்கைக்குச் சூலினி என்று பெயர். சூலினி மந்திரம் மிகவும் ஆற்றல் வாய்ந்தது.

சிவனது சூலம், திருமாலின் சக்கரம், இந்திரனுடைய குலிசம் இவை ஒன்றேனும் சூரனை வெல்லுந் தரத்தன அல்ல; வேல் ஒன்றே சூரனை வெல்லக்கூடும் என்று திருவுத்தரகோசமங்கைப் பிள்ளைத் தமிழில். ''பூவில் வரு...'' எனத் தொடங்கும் பாடலிலும், அருணகிரிநாதர் இயற்றிய வேல் விருத்தத்தில் 'வெங்காள கண்டர்கைச்......'' எனத் தொடங்கும் பாடலிலும் குறிப்பிடப் படுகிறது.

திருப்புகழில் வேலின் ஒளி, வேலின் அலங்காரம், வேலின் உருவம், வேல்-மந்திரம், வேலின் பஞ்ச கிருத்தியம், வேலின் உக்ரம், வேலின் பெருமை, வேலைத் தியானிப்பதின் பயன் ஆகியவை கூறப் பெற்றுள்ளன. (விவரம்—முருக வேல் பன்னிரு திருமுறை. தொகுதி 5 அநுபந்தத்தில் காண்க. உரையாசிரியர் இராவ்பகதூர் டாக்டர் தணிகைமணி வ. சு. செங்கல்வராயப் பிள்ளை).

வேல் வழங்குவது முருக வழிபாட்டுக்கு ஏற்றதாகும். இறைவனின் பிரதிநிதியாய் தீர்த்தவாரியில் நீர் முழுகுவது திரிசூல வடிவமான அஸ்திர தேவர். அதுபோல முருகனை வழிபட இயலாத இடங்களில் அஸ்திர தேவரை வழிபடுவதும் முருகன் அருளைப் பெறுவதும் ஞானநூல்களில் குறிப்பிடப்படுகிறது.

காசி இரண்டு எழுத்துத்தானே, காண எத்தனை நாட் செல்லும்? காசி விசாலாட்சி காஞ்சி காமாட்சி மதுரை மீனாட்சி. கங்கைக்கு நிகரான நதியும் இல்லை; காசிக்கு நிகரான பதியும் இல்லை.

# செய்திகள்

- சென்னை ஆழ்வார் திருநகரில் சிந்தாமணி கன்ஸ்யூமர் கோவாப ரேடிவ் ஸ்டோர்ஸ் என்ற பெயரில் கூட்டுறவு ஸ்டோர்ஸ் 8-4-73 ஞாயிற்றுக்கிழமை அன்று சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி கனம் எஸ். நடராஜன் அவர்கள் தலைமையில் திறந்து வைக்கப்பட்டது. இந்தக் காலனி மக்களுக்கு வசதியாக இந்த ஸ்டோர்ஸ் செயல் படுவது பெருமைக்குரிய விஷயமாகும்.

- அண்ணாமலை பல்கலைக்கழகத்தின் 41-வது பட்டமளிப்பு விழாவில் கலந்து கொண்டு தமிழக ஆளுநர் திரு கே. கே. ஷா அவர்கள் உரையாற்றும் போது பாடங்களில் வழக்கமான முறையில் அறி வூட்டுவது மட்டுமல்லாமல் தேசியத் தலைமையை ஏற்கும் திறமை பெற்றவர்களாகவும் மாணவர்களை உருவாக்க பல்கலைக் கழகங் கள் ஆவன செய்ய வேண்டும் என்று குறிப்பிட்டார்.

- பஞ்சாப், ஹரியானா, மத்திய பிரதேசம், உத்திர பிரதேசம் குஜராத் ஆகிய ஐந்து மாநிலங்களிலும் மொத்த கோதுமை விற்பனை வர்த்தகத்தை அரசு மேற்கொள்ளும் திட்டம் ஏப்ரல் முதல் தேதி முதல் அமலுக்கு வந்து விட்டது.

- மின்சார விநியோகம் சம்பந்தமாக நீண்ட கால அடிப்படையில் திட்டம் வகுப்பதில் அரசாங்கம் முன் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தென்னிந்திய தொழில் அதிபர்கள் சம்மேள னத்தின் தலைவர் திரு. எம். எம். முத்தையா அரசாங்கத்தை வற்புறுத்தினார். சில மாதங்களுக்கு 75 சதவீதம் மின்சார வெட்டை அமல் செய்வதற்கு பதிலாக அவசியமானல் வருடம் முழுவதும் 15 சதவீதம் அல்லது 20 சதவீதம் மின்சார வெட்டை அமல் செய்யலாம் என்றும் அவர் கருத்துத் தெரிவித்தார்.

- கடவுள் சிலை திருட்டைக் கண்டு பிடிக்க குற்றப் புலனாய்வுத் துறையில் உள்ள போலீஸ் பிரிவை மேலும் அதிகரிக்க வேண்டும் என போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் யோசனை தெரிவித்திருப் பதாகவும், அது அரசின் பரிசீலனையில் இருப்பதாகவும் ஒரு கேள்விக்கு பதில் அளிக்கையில் தமிழக முதல்வர் மேல் சபையில் அண்மையில் தெரிவித்தார்.

- தமிழ்நாட்டில் கிராமவட்டாரங்களில் உள்ள சப்இன்ஸ்பெக்டர்களுக்காக மேற்கொண்டு 100 மோட்டார் சைக்கிள்கள் வாங்க அரசாங்கம் ரூ 6.25 லட்சம் அனுமதித்துள்ளது. ஏற்கனவே 150 மோட்டார் சைக்கிள்கள் வாங்க அனுமதித்துள்ளது. சொந்த மோட்டார் சைக்கிள் உள்ள சப்இன்ஸ்பெக்டர்களும் இருக்கிறார்கள்.

- வி. ஜி. பி. சகோதரர்கள் சுற்றுலாப் பயணிகளைக் கவர்வதற்காக அமைத்து வரும் கோல்டன் பீச் என்னும் உல்லாசக் கடற்கரையை 1-4-73 ஞாயிற்றுக்கிழமை அரசினர் திரைப்படப் பயிற்சிக் கல்லூரி மாணவர்களும், ஆசிரியர்களும் கலந்து கொண்டு தொடங்கி வைத்தனர். திருவான்மியூர்க் கடற்கரையில் நூறு ஏக்கர் பரப்பில் உருவாகி வரும் இந்த உல்லாசக் கடற்கரை கலிபோர்னியா, மியாமி, ஹவாய் போன்ற கடற்கரைகளுக்கு இணையாக அமையும் என்று வி. ஜி. பன்னீர்தாஸ் வரவேற்றுப் பேசும் போது குறிப்பிட்டார்.

- ராசிபுரம் சிவானந்தா பிரார்த்தனை மண்டபத்தில் மகாசிவன்ராத்திரியை முன்னிட்டு 3-3-73ந் தேதி சனிக்கிழமை மாலை 6 மணி முதல் காலை 6 மணி வரை 12 மணி நேரம் இடைவிடாது அகண்ட ஓம் நமசிவாய கீர்த்தனையும், லிகித ஜபமும் மந்திர ஜபமும் நடைபெற்றன.

- சிறந்த தமிழ் நூல்கள் பரிசளிப்பு விழாவில் கலந்து கொண்டு தமிழக கல்வி அமைச்சரவர்கள் பேசும் போது குறிப்பிட்டதாவது ஒவ்வொரு ஆண்டும் உலகில் மொத்தம் 5 லட்சம் புது நூல்கள வெளியிடப் படுகின்றன. இதில் இந்தியாவில் வெளியாகும் புத்தகங்கள் 13,000 தான். இத்தனைக்கும் இந்தியாவில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் எண்ணிக்கை 16 கோடிக்கு மேல் என்றார்.

- "அமெரிக்க நாட்டில் நீதி முறை" என்னும் தலைப்பில் இங்குள்ள அமெரிக்கப் பண்பாட்டு நிலையத்தில் திங்களன்று தொடர்—நிகழ்ச்சி ஒன்றைத் துவக்கி வைத்துத் தலைமை நீதிபதி உரைநிகழ்த்துகையில், "அமெரிக்காவில் முன் நிகழ்ச்சிகள் நீதித்துறையின் முன்னேற்றத்துக்கு அணை போட்டது கிடையாது. மாறி வரும் சூழ்நிலைகளின் தேவைகளுக்கேற்ப முன் நிகழ்ச்சிகளைப் புறக்கணிக்க நீதிபதிகள் ஒரு போதும் தயங்கியதில்லை" என்று குறிப்பிட்டார்.

# விநோபாஜி குட்டிக் கதைகள்

ஒரு மாணவன் இருந்தான். அவனுடைய வகுப்பில் ஒரு பைசாவுக்கு நான்கு பழம் என்றால் பன்னிரண்டு பைசாவுக்கு எத்தனை பழம் என்று கணக்கில் கேள்வி கேட்டார்கள். 'நாற்பது பழம்' என்று விடை சொன்னான் அம்மாணவன். ஆசிரியர் அவனுக்கு சைபர் மார்க் கொடுத்து பெயில் செய்து விட்டார்.

''நீங்கள் எனக்கு ஏன் சூன்ய மார்க் கொடுத்தீர்கள், இது எனக்குப் புரியவில்லை. இதற்கு சரியான விடை 48 என்றால் நான் சொன்ன விடை 40. ஆகவே எனக்கு நாற்பது மார்க் கொடுக்க வேண்டும்'' என்று கேட்டான் பையன்.

ஆசிரியர் இதற்கு பதில்சொல்ல முடியவில்லை. திரும்பத் திரும்ப பையன் இதையே கேட்டான். அவர் அவனை அடித்துவிட்டார். பாவம், அம்மாணவன் பேசாமல் உட்கார்ந்து விட்டான். சைபர் மார்க்கும், அடி வாங்கியும் கூட அவனுக்கு சமாதானம் ஏற்படவில்லை.

பிறகு இந்த வினா என்னிடம் வந்தது. நீ சொன்ன விடை 40. ஆனால் இன்னொருவன் இதற்கு விடை 50 என்றால் அவனுக்கு 50 மார்க் கொடுக்கமுடியுமா? ஆகையினால் நாற்பதும் தவறு, ஐம்பதும் தவறு. எது சரியோ அதுவே சரி. பன்னிரண்டு பைசாவுக்கு 40 பழமும் கிடைக்கக் கூடாது; ஐம்பதும் கிடைக்காது என்று நான் அவனுக்கு விளக்கிச் சொன்னேன். அடியால் முடியாத செயல் அன்புச் சொல்லால் நடந்தது.

விளங்கச் சொல்லியும் மாணவன் புரிந்து கொள்ளாவிட்டால் ஆசிரியர் அவனுக்கு ஒரு அடி கொடுக்கிறார். அடிப்பதால் மூளைக்கு நல்ல இரத்த ஓட்டமும் ஏற்படும்; அவனுடைய அறிவு இதனால் தீவிரமடையும்; சொல்லிக் கொடுப்பதை அவன் புரிந்து கொள்ளுவான் என்று ஆசிரியர் நினைக்கிறார். இது ஒரு முறை. ஒரு தடவை சொல்லி அவனுக்குப் புரியாவிட்டால் உதாரணம் கொடுங்கள். அவர்களுக்குப் புரியும் நடையில், அவர்கள் மட்டத்திற்கு இறங்கி விளக்குங்கள். ஒரு விஷயத்தைப் புரிய வைக்க இதுவே வழி.

ஓர் இடத்தில் வழியில் பொன்னாலான பொருள் கிடந்தது. இதை என்ன செய்யலாம் என்று கேட்டார்கள். இதை எடுத்த இடத்திலேயே வைத்து விடுங்கள். பொருளை இழந்தவன் தேடி வந்தாலும் வருவான், இல்லாவிட்டால் அதை போலீசில் ஒப்படைத்து விடுங்கள் அல்லது கிராமத்து கிராமசபையிடம் இதை ஒப்படைக்கலாம். இதை பேசாமல் தனது பையில் போட்டுக் கொள்ளுவது முறைகேடானது. இந்தத் தவறான எண்ணம் ஏற்படுவதே தவறு என்று சொன்னேன்.

ஆனல் ரங்கா-பங்கா என்ற கூலி வேலை செய்யும் தம்பதிகள் இந்த விஷயத்தில் எல்லோரையும் பிரமிக்கச் செய்து விட்டனர். வழியில் பொன்னணி கிடப்பதைக் கண்ட ரங்கா அதன்மீது நிறைய மண்ணையும் புழுதியையும் வாரிக் கொண்டு வந்து போட்டான். ''ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்?'' என பங்கா கேட்டாள்.

''இந்தப் பொருளைப் பார்த்து உனக்கு அதன் மேல் ஆசை ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காகவே இவ்வாறு செய்கிறேன்'' என்று பதில் சொன்னான் ரங்கா.

''தூசு மேல் தூசைப் போடுவது வீண் வேலை'' என்று சிரித்தாள் பங்கா.

(தஞ்சாவூர் சர்வோதயா பிரசுரலாயம் வெளியீட்டிலிருந்து)



# மானிடப் பிறவியின் உயர்வு

புலவர்மணி திரு. மு. ரத்தினதேசிகர்

தமிழ் மூதாட்டி ஔவையார் "அரிது அரிது மானிடராதல் அரிது - அப்படி மானிடராய்ப் பிறந்தாலும் கூன், குருடு, செவிடு முதலிய எண்பேரெச்சங்களின்றிப் பிறத்தல் அரிது - அப்படிப் பிறந்தாலும், ஞானமும் கல்வியும் பெறுதல் அரிது - அப்படிப் பெற்றுத் தான தருமம் செய்தால் வானவர் நாட்டு வழி திறந்திடும் என்று கூறிச் சென்ருர்.

எல்லாப் பிறவிகளிலும் மானிடப் பிறவி உயர்ந்ததாகக் கருதப் பெறுவதற்குரிய பல காரணங்களில், இப் பிறவி ஐயறிவுடன் பகுத்தறிவையும் பெற்றிருப்பது ஒன்ருகும். தக்கது இன்னது என்றும் தகாதது இன்னது என்றும் பிரித்துணர்வதே பகுத்தறிவு. மனிதராய்ப் பிறந்தும் இப் பகுத்தறிவினைப் பெருதவர் விலங்கினங்களாகவே கருதப் பெறுவர். இவர்களே "கையறியா மாக்கள்" என்று ஆன்ருேரால் இழித்துக் கூறப்பெறுகின்றனர்.

மக்கள் பெரும் பகுத்தறிவு உலகியலறிவு என்றும், இறையறிவு என்றும் இருகூறுபடும். உலகியல் அறிவு பொருள்தேட, உண்ண, உடுக்க, உடம்பை வளர்க்கப் பயன்படுவது. இறையறிவு உயிரை வளர்க்கப் பயன்படுவது. உடம்பை வளர்க்கும் வழிகளில் மற்று ஒன்று யோக நெறியாகும்.

வெறும் ஊனுல் மட்டும் வளர்க்கப்படும் உடம்பு காக்கைக்கு இரையாகிக் கழிவது. "காற்றைப் பிடிக்கும் கணக்கை அறிந்து உடம்பை வளர்த்தால் கூற்றுவனையும் வெல்ல முடியும்" என்பது திருமூலதேவர் துணிபு. இப்படித் தன் உடம்பை வ்ளர்த்த அவர் உயிரையும் இறை நெறியில் வளர்த்தார். இந்த உண்மையைத்தான்.

"உடம்பார் அழியின் உயி
ரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம்
சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும்
உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன்
உயிர் வளர்த்தேனே"

என்ற திருமந்திரத்தில் கூறிச் சென்ருர்.

இறைவன் உயிர்களை உய்விக்க, உடம்பு, இவ்வுடம்பைப் பற்றிய-மெய் வாய் கண் - மூக்குச்செவி என்ற ஐம்பொறிகள்; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்புல அறிவுகள்; மனம், புத்தி, சித்தி, அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள்; இந்த உலகம்; இந்த உலகில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு நுகரும் இன்பவாழ்வு என்பவற்றைத் தந்திருக்கிருன்.

இந்த உலகில் பழவினைக்கு ஏற்ற வண்ணம் பல்வேறு மானிட வடிவில் உயிர்கள் பிறக்கின்றன. பழவினையை நுகர்ந்துகொண்டே மேல் பிறவிக்கு ஆன வினைகளையும் செய்கின்றன. உள் அழுக்கால் தம்மையும் மறந்து தலைவருகிய இறைவனையும் மறந்து பிறப்பு இறப்புகளுட்பட்டு உழல்கின்றன.

மக்களுயிர் நல்லவர் கூட்டுறவாலும் - நற்செயலாலும் - நல்ல

சிந்தையாலும் தெய்வநெறி நிற்றலாலும் உயர்நிலை அடையும். இந்த நிலையில்தான் மனிதப்பிறவி உயர்ந்ததாகக் கருதப் படுகின்றது. ''மானிடப் பிறவியை இறைவன் உயிர்களுக்கு வகுத்துத் தந்தது இறைபணி புரிவதற்குத்தான்'' என்று சாத்திரம் கூறும். அப்பர்சுவாமிகள் திரு அங்க மாலையில் தலை முதலிய உறுப்புகளை இறைபணிபுரியுமாறு அழைக்கின்றார்.

எனவே இத்தகைய உயர்பிறவியைப் பெற்ற நாம் பகுத்தறிவின் துணைகொண்டு அல்லன நீக்கி நல்லன புரிந்து பிறவிக் கடல் கடந்து பேரின்ப வாழ்வு எய்த முயல்வோமாக. ○



**திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த**
**புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்**
***5-3-72உ இலட்சதீப விழாவில்***
**பழனி பரிமள விலாஸ்**
**S.சித்தநாதன்சன்ஸ் S.குருசாமி அவர்களுக்கு**
***சதானந்த விபூதி சக்கரவர்த்தி***
என்ற பட்டத்தை வெள்ளியினால் பொறித்த கேடயம் கொடுத்தபோது
**எடுத்த படம்.**

# கங்கை

கங்கை இந்தியாவின் மிகப் பெரிய ஆறு. உலகப் பெரிய ஆறுகளுள் ஒன்று. சமயத் தொடர்புடையது. இந்துக்களால் புனித ஆருகப் போற்றப்படுவது. நீளம் 1,557 மைல். தென் இமயமலையில் கங்கோத்திரி என்னும் இடத்துக்குக் கடல் மட்டத்திலிருந்து 13,800 அடி உயரத்துக்கு மேலுள்ள பனிக்குகையில் பாகீரதி ஆறு தோன்றுகிறது. அவ்வாற்றுடன் ஜான்ஹவி, அளகநந்தா என்ற ஆறுகள் சேர்ந்து கங்கையாகுகின்றது. இது சுகி என்ற இடத்தில், இமயமலையைத் துளைத்துக்கொண்டு தென்மேற்கில் திரும்பி ஹரித்துவாரம் என்ற இடத்தை அடைகிறது.

அங்கிருந்து உத்திரப்பிரதேசத்தில் சிறிதும் தூரம் தெற்காக ஓடிப் பின் தென்கிழக்காகத் திரும்பி, பருக்காபாத் மாவட்டத்தின் கிழக்குப் பகுதி வழியாக ஓடுகிறது. பருக்காபாத் மாவட்டத்தில் கங்கையோடு ராமகங்கா ஆறு கலக்கிறது. பிரயாகையில் (அலகாபாத்தில்) யமுனை என்ற பேராறு கங்கையோடு கலக்கிறது. அங்கிருந்து உத்தரப் பிரதேசத்தில் கிழக்காகப் பாய்ந்தோடி, வழியில் கோமதி ஆறும் காக்ரா ஆறும் கலக்கப்பெற்றுக் காசி நகரைக் கடந்து, வேறு பல சிற்ருறுகளையும் தன்னோடு சேர்த்துக் கொண்டு, வங்காளத்தின் எல்லையில் சேர்ந்து, ராஜமகால் குன்றுகளைத் தொட்டுக்கொண்டு தெற்காகத் திரும்பி, கௌரி என்ற சிதைந்த நகரத்திற்கு 20 மைலுக்கு அப்பால் கிளைகளாகப் பிரிந்து கழிமுகமாக அமைகிறது.

இக்கழிமுகம் வங்காள விரிகுடாவிலிருந்து 300ஆம் மைலில் தொடங்குகிறது. பத்மா எனப்படும் தலையாய கிளையானது தென்கிழக்குத் திசையில் ஓடி, கோலந்தாவில் பிரமபுத்திரா நதியுடன் கலந்து, பின் மேக்னு என்ற அகன்ற கழிமுகத்தை அமைத்துவிட்டு, நவகாளி என்ற இடத்தில் கடலில் கலக்கிறது. மேக்னு கழிமுகம் கிழக்குக் கோடியில் உள்ளது. அதற்கு மேற்கே மற்றும் பல கழிமுகங்கள் உள்ளன. மேற்குக் கோடியில் ஹூக்ளிக் கழிமுகம். இதில்தான் கடலிலிருந்து 80 மைல் தொலைவில் கல்கத்தா நகரம் உள்ளது. ஹூக்ளிக் கிளையாறே போக்குவரத்திற்கு முக்கியமான நீர்வழி. கடலிலிருந்து 1,300 மைல் தூரம் வரை கங்கையில் நடுத்தரக் கப்பல்களும் கல்கத்தாவரை கடலில் செல்லும் பெரிய நீராவிக்

கப்பல்களும் செல்கின்றன. கங்கை யாற்றின் நீர் பாயும் நிலத்தின் பரப்பு 4,32,480 சதுரமைல்.

புராண வரலாறு: இந்தியாவில் ஆங்காங்குள்ள ஆறுகள் தெய்வத் தன்மை கொண்டனவாகப் போற்றப்படுகின்றன. அவற்றுள் கங்கைக்கு மட்டும் தனித்ததோர் பெருமை பண்டைக்காலந் தொட்டே இருந்து வருகிறது. கங்கை பாரதநாடு முழுதுமே போற்றப்படும் மாநதியாகும் இந்து மதத்திற்கு ஓர் உயிர் நாடி போல் ஓடிக்கொண்டிருப்பது கங்கை. மானிடரின் பாவங்கள் அனைத்தையும் கழுவி, அவர்களுக் குத் தூய்மையையும், பேரறிவை யும், வீட்டையும் அளிக்க வல்ல தென்று நூல்களாற் கூறப்பெறும் இந்த நதி இந்திய நதிகள் எல்லா வற்றிற்குமே பிரதிநிதியாக விளங் குகிறது. மற்ற இடங்களில் உள்ள பல நதிகளுக்கும் புனல்களுக்கும் உபசாரமாகக் கங்கையின் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. எல் லா மங்கல ஸ்நானத்திற்கும் 'கங்கா ஸ்நானம்' என்ற புனிதப் பெயரே வழங்கி வருகிறது. இந் துக்கள் குடிக்கும் நீர் எதுவாயி னும் அதை கங்காமிருதம் என்றே சொல்லுவர். வாழ்க்கையின் கடைசிக் காலத்தில் கங்கைக்குப் போகவேண்டும்; அதன் கரையில்

காலத்தை நல்ல நினைவுடன் போக்கவேண்டும் என்று வைதிக இந்துக்கள் எண்ணுவர்.

கங்கைக்குத் தேவநதி என்றும், ஆகாச கங்கை என்றும் பெயர். கங்கை முதலில் விண்ணுலகிலேயே இருந்து, பின்னால் பூவுலகில் இறங்கிப் பின் கீழே பாதாளத்திற்குச் சென்றதால் இதற்கு 'த்ரி-பத-கா' (மூன்று வழிகளில் செல்பவள்) என்ற பெயர் ஏற்பட்டது. வானிலிருந்து கங்கை கீழே வந்த கதை இதிகாச புராணங்களில் இரண்டு வகையாகக் காணப்படுகிறது. மிகவும் நன்றாய்த் தெரிந்த கதை வால்மீகி இராமாயணத்தில் பாலகாண்டத்தில் இராம லட்சுமணர்களுக்கு விசுவாமித்திரர் சொல்லும் கதைகளுக்கிடையே காணப்படுவதாகும். கங்கை இமயமலையின் மகளாய்த் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி வானிலே தங்கி வந்தாள். அயோத்தியை ஆண்ட சகரமகாராஜன் வேள்வியைத் தொடங்குவதற்கு முன் இந்திரன் வேள்விக் குதிரையைத் திருடிக் கொண்டுபோய்ப் பாதாளத்தில் தவமிருக்கும் கபில முனிவரின் அருகில் கட்டி ஒளித்துவிட்டான். சகரனுடைய 60,000 பிள்ளைகளும் குதிரையைத் தேடிக் கொண்டு, பூமியைத் தோண்டிப் பாதாளத்திற்குச் சென்றனர்; பாதாளத்தில் கபில முனிவருக்கு அருகே தந்தையின் வேள்விக் குதிரையைக் கண்டதும் அவர்கள் கபிலரே குதிரையின் திருடர் என்றெண்ணி, அவரைத் தாக்குவதற்கு ஓடி வந்தனர். கபிலர் தம் தவசக்தியால் அவர்கள் அனைவரையும் சாம்பலாக்கினார். சகரன் தன் மூத்த மனைவியின் மைந்தன் அசமஞ்சன் மகனை அஞ்சுமானை அனுப்பிக் குதிரையையும் காணாமற்போன மக்களையும் தேடச் செய்தான். அஞ்சுமான் பாதளஞ் சென்று குதிரையைக் கண்டு, அங்கே நடந்த சம்பவத்தையும், கங்கை நீரைக் கொண்டு வந்து சாம்பல் குவியலை நனைத்தால் எரிந்துபோன சகர புத்திரர்களின் ஆன்மா கடைத்தேறும் என்ற செய்தியையும் சுபர்ணன் என்ற தெய்வப் பறவையிடமிருந்து அறிந்தான். குதிரையைக் கொண்டு சகரன் வேள்வியை நிறைவேற்றிக்கொண்டான். சகரனுக்குப் பிறகு அரசனான அஞ்சுமான் எவ்வளவோ பாடுபட்டும் கங்கையை வானிலிருந்து கீழே கொண்டுவர முடியவில்லை. திலீபன் அரசனானான். அவனாலும் ஒன்றும் செய்ய முடிய்வில்லை. அவனுக்குப் பிள்ளையாய்த் தோன்றிய பகீரதன் தன் தவத்தால் பிரமதேவனையும் சிவபிரானையும், கங்கையையும் திருப்தி செய்து, கங்கையை இறக்கித் தன் முன்னோர்கள் கடைத்தேறும்படிசெய்தான்.

(தொடரும்)

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனாதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17